# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) வார ஏடு

கதிர் 8] 11—10—70 25 காசுகள் [மலர் 4


உள்ளே...

மாணவர் போராட்டங்கள்

★

பல்லக்கு தூக்கிகளின் வெற்றி பவனி

# துர்க்காபூர் தினம் கொண்டாடுக

## சி. ஐ. டி. யூ. காரியக் கமிட்டியின் அறைகூவல்!

இந்தியத் தொழிற்சங்க மையத்தின் நிர்வாகக்குழுக் கூட்டம் ராஜஸ்தான் மாநிலத் தலைநகரான ஜெய்ப்பூரில் அக்டோபர் 3, 4, 5 தேதிகளில் நடைபெற்றது.

இந்திய அரசு துர்க்காபூரில் மத்திய ரிசர்வ் போலீசையும் ராணுவத்தையும் கொண்டு நீசத்தனமான அடக்குமுறையை கட்டவிழ்த்து விட்டதை எதிர்த்து, நவம்பர் முதல் வாரத்தில் இந்திய நாடெங்கும் கண்டன இயக்கம் நடத்துவதென்றும், இந்திய அரசு, தொழிற்சங்கங்களின் உரிமைகளை முடமாக்கும் நோக்குடன் கொண்டுவரவிருக்கும் தொழில் உறவு மசோதாவை எதிர்த்துப்போராடுவதென்றும் முடிவு செய்துள்ளது.

அன்புமிக்க தோழர்களே,

மேற்கு வங்கத்தில் உள்ள துர்க்காபூரில் மத்திய அரசின் இரும்பு—உருக்காலையும், அதை மையமாகக் கொண்ட ஒரு பெரும் தொழிற்கேந்திரமும் உருவாகி, இயங்கி வருவதை நீங்கள் அறிவீர்கள். இக்கேந்திரத்தில் உள்ள தொழிலாளர்கள் மீது, சென்ற ஆகஸ்ட், செப்டம்பர் மாதங்களில், இந்திரா காங்கிரசின் மத்திய அரசு, ஜனாதிபதி ஆட்சியின் மூலம், என்றுமே கண்டும் கேட்டுமிராத கொடிய ராணுவ—போலீஸ் அடக்குமுறையை கட்டவிழ்த்து விட்டது, ஆலைப்பாதுகாப்புப் படையினரை ராணுவத்தைக் கொண்டு சட்ட விரோதமாக வெளியேற்றல், தொழிற்சங்க ஊழியர்களை சஸ்பெண்டுசெய்தல், விலக்கல், 144 தடை உத்தரவு, ஊரடங்குச் சட்டம், வீடு புகுந்து அடித்தல், பெண்களை மானபங்கப்படுத்துதல், முக்கிய ஊழியர்களைப் பிடித்து அங்கஹீனம், அசக்தம் ஏற்படும் வரை அடித்தல், பொய்யான கொலை வழக்குகளை தலைவர்கள் மீது ஜோடித்து கைது செய்தல் முதலிய சகல கொடுமைகளையும் செய்துள்ளனர்.

முற்றிவரும் பொருளாதார நெருக்கடியின் விளைவுகளை எதிர்த்து வெடித்துவரும் வர்க்கப்போராட்டங்களை அடித்து நொறுக்க, ராணுவத்தையும், மத்திய ரிசர்வ் போலீசையும் எல்லைப்பாதுகாப்புப் படையையும் இந்திரா அரசு பயன்படுத்திவருகிறது அதன் கோர சொரூபத்தைத்தான் துர்க்காபூரில் காண்கிறோம்.

பல்லாயிரக்கணக்கான இந்திய இரும்பு— உருக்குத் தொழிலாளர்கள் நடத்திவரும் நல்வாழ்வுப் போராட்டங்களுக்கு, துர்காபூரில் உள்ள ஹிந்துஸ்தான் உருக்காலை ஊழியர் சங்கம் ஆதர்சமாக விளங்கி, தலைமை தாங்கி வருகிறது. சி ஐ. டி. யூ வுடன் இணைந்துள்ள இச்சங்கம் காட்டிய வழியில் போராடித்தான்—மத்திய அரசையும், தனியார் துறைப் பெருமுதலாளிகளையும், ஏ. ஐ. டி. யு. சி. தலைமையையும் எதிர்த்துப் போராடித்தான்— இரும்பு—உருக்குத்தொழிலாளர்கள், மாதம் 33 ரூபாய் வீதம் இடைக்கால நிவாரணம் பெற்றனர்கள். தற்போது நடை—பெற்றுவரும், இறுதி ஒப்பந்தத்துக்கான பேச்சு வார்த்தையிலும், இச்சங்கம் சேந்தரமான பாத்திரத்தை வகித்து வருகிறது. நெருக்கடியின் பளுவைத் தொழிலாளர்களின் தலையில் தூக்கி வைக்கும் தங்கள் முயற்சிகளுக்குக் குறுக்கே நிற்கும் இச்சங்கத்தை உடைத்து நொறுக்க, மத்திய அரசும் தனியார் துறை பெருமுதலாளிகளும் துடியாய் துடிக்கின்றனர். அதன் விளைவே இக்கொடிய அடக்குமுறை.

மேற்கு வங்கத்தில் ஜனாதிபதி ஆட்சியை ஒழித்துக்கட்ட, உடனே இடைத் தேர்தலை நடத்த வேண்டும் என்று கோரி மக்கள் போராடி வருகின்றனர். இப்போராட்டத்தில் முன்னணியில் நிற்கும் துர்க்காபூர் தொழிலாளர்களுக்கு "பாடம் கற்பிக்கும்" நோக்கத்துடனேயே இந்த அடக்குமுறை அவிழ்த்து விடப்பட்டுள்ளது.

இதற்கு வலது கம்யூனிஸ்டுகளும் மான வெட்கமின்றி துணை நின்றனர். அடக்கு

(12 ஆம் பக்கம் பார்க்க)

### சி. ஐ. டி. யூ. தமிழ் மாநிலக்குழுவின் கூட்டம்.

அன்புமிக்க தோழர்களே,

சி. ஐ. டி. யூ வின் தமிழ் மாநிலக்குழுவின் கூட்டம் இம்மாதம் 24, 25 தேதிகளில் திருச்சியில் வைத்து நடைபெறும். கூட்டம் நடைபெறும் இடம் பின்னர் அறிவிக்கப்படும்,

நிகழ்ச்சி நிரல்.

(1) சி. ஐ. டி. யூ. காரியக்கமிட்டியின் ஜெய்ப்பூர் கூட்ட முடிவுகளை நிறைவேற்றுதல்.

(2) தமிழ் மாநில மாநாட்டுத் தயாரிப்பு வேலைகள் (சி. ஐ டி. யூ.வின் தமிழ் மாநில மாநாட்டை டிசம்பர் 18, 19, 20-ம் தேதிகளில் நடத்த காரியக்கமிட்டி அனுமதித்துள்ளது. தோழர் பி. ராமமூர்த்தியும், தோழர் ஜோதிபாசுவும் மாநாட்டில் கலந்து கொள்வர்.)

(3) காரியதரிசியால் கொண்டுவரப்படும் இதர விஷயங்கள்.

எல்லா குழு உறுப்பினர்களும் அவசியம் கலந்து கொள்ளும்படி வேண்டுகிறேன்.

சென்னை 7—10—70

தோழமையுள்ள,
**ஆர். உமாநாத்**, செயலாளர்
தமிழ் மாநிலக்குழு, சி. ஐ. டி. யூ.

### திருவனந்தபுரம் வானொலி நிலையம்! – டெல்லி அஞ்சல்!!



தீக்கதிர்

## கேரள மந்திரி சபையும் முதலாளிகள் வரவேற்பும்

திரு. அச்சுதமேனன் தலைமையில், குட்டிமுன்னணி பதவி யேற்றுள்ளது.

*133 பேரைக் கொண்ட சட்டமன்றத்தில் இக் குட்டி முன்னணியின் பலம் 37 தான்! (வலது கம்யூனிஸ்ட், 16. முஸ்லீம்லீக் 12. ஆர். எஸ். பி, 6. பி. எஸ், பி. 3)*

சரண்சிங் அமைச்சரவைக்கு பெரும்பான்மை பலம் இல்லை என்று கூறி, உத்திரபிரதேசத்தில் ஜனாதிபதி ஆட்சி ஏற்படுத்தப்பட்டிருக்கும் சமயத்தில்—இவ்வளவு சிறுபான்மை பலம் கொண்ட குட்டி முன்னணி பதவி யேற்க அனுமதிக்கப் பட்டுள்ளது.

இண்டிகேட் காங்கிரசின் ஆதரவு இல்லையெனில் இம் மந்திரிசபை ஒரு விநாடி கூட பதவியில் நீடிக்க முடியாது!

அவமானகரமான இந்த 'பொம்மலாட்டம்' தான்—''தேசீய ஜனநாயகப் புரட்சியின்'' முன் உதாரணமாம்! வெட்கக் கேடு!!

குட்டி முன்னணி அமைச்சரவையின் 'கடிவாளம்' தன் கையில் இருப்பதை மனதில் கொண்டுதான்—

''அமைச்சரவைக்கு வெளியில் இருந்து கொண்டு, தனது திட்டத்தைக் காங்கிரஸ் அமுல் படுத்த முடியும்''—என்று இண்டிகேட் கருணாகரன் தன்னம்பிக்கையுடன் கூறியுள்ளார்.

அதாவது—இனி கருணாகரனும், விசுவநாதனும் காலால் இடும் ஆணையை—தலைமேல ஏற்று, அச்சுதமேனன் அமைச்சரவை நிறைவேற்றும்!

திரு. கருணாகரனும், விசுவநாதனும் நிறைவேற்ற விரும்பும் திட்டம் எத்தகையவை? 'ஒன்றுபட்டிருந்த காங்கிரசின் கொள்கையிலிருந்து, நாங்கள் ஒரு மில்லி மீட்டர்கூட மாறவில்லை'' என்று இந்திரா காந்தி அம்மையாரே கூறியுள்ளார்!

எனவே—கருணாகரன், விசுவநாதன் ஆகியோரின் ஆணையின்படி, அச்சுதமேனன் அமுல் படுத்தப் போகும் கொள்கை—

''பழைய ஒன்றுபட்டிருந்த காங்கிரசின் கொள்கை'!

75 பெரு முதலாளித்துவத் திமிங்கிலங்களைக் கொழுக்க வைத்த—நிலப்பிரபுத்துவ வர்க்கத்தை பாதுகாத்துவரும் காங்கிரசின் ஏவலாட்களே வலது கம்யூனிஸ்டுகள் என்பதற்கு இதை விட வேறென்ன அத்தாட்சி வேண்டும்?

இதனை—பதவியேற்பு 'வைபவத்தன்று,' அச்சுதமேனன் அறிவித்துள்ள போலீஸ் கொள்கை தெளிவு படுததியுள்ளது!

''தொழில் விவசாயத் துறைகளில் உற்பத்தி கெடாதவாறு அமைதி காக்கும் பணியில் போலீசார் ஈடுபடுவார்கள்'' என்று அச்சுதமேனன அறிவித்துள்ளார்.

தொழில் விவசாயத் துறைகளில் கொள்ளையடிக்கும் முதலாளிகளையும் நிலப்பிரபுக்களையும் எதிர்த்து, பாட்டாளி வர்க்கம் போராட்டத்தில் இறங்கும் போதெல்லாம், உடைமை வர்க்கத்தினரின் முதல் கூக்குரல் தான் என்ன?

''உற்பத்தி கெடுகிறது'' ''அமைதிக்குப் பங்கம்'' என்பது தான் அவர் தம் முதல் கூக்குரல்.

''உற்பத்தி கெடுகிறது'' அமைதிக்குப் பங்கம்'' என்ற பெயரில் தான் பாட்டாளி வர்க்கத்தின் போராட்டத்தை உடைமை வர்க்கப் பாதுகாப்பு அரசுகள் ஒடுக்குகின்றன!

உடைமை வர்க்கத்தின்நம்பிக்கைக்கு உகந்த எடுபிடியாக மாறி விட்ட அச்சுதமேனனும் அதையே முழங்கியுள்ளார்! மேலும் அச்சுதமேனன் குறிப்பிட்டுள்ளதாவது:—

''இதனால் குடியானவர்களும் தொழிலாளர்களும் போராட்டத்தில் ஈடுபடவிடாமல் தடுக்கப் படுவார்கள் என்று அர்த்தமல்ல! போராட்டங்கள் அமைதியாக நடக்க வேண்டும். வன்முறையில் இறங்கினால் மட்டும், போலீசார் தலையிடுவார்கள்'' என்று அச்சுதமேனன் விளக்கியுள்ளார். (தினமலர் [illegible]–10–70)

சிண்டிகேட், இண்டிகேட், சுதந்திரா, ஜனசங்கம், தி. மு. க. ஆகிய கட்சிகள் அனைத்தும் ஆட்சி நடத்தும் மாநிலங்களில் இதே கொள்கைதான் போலீஸ் கொள்கை என்று அமுல் படுத்தப்பட்டுள்ளது.

அச்சுதமேனின் போலீஸ் கொள்கைக்கும், சிண்டிகேட், இண்டிகேட், சுதந்திரா, ஜனசங்கம் ஆகிய கட்சிகள் நடத்தும் மாநில அரசுகளின் போலீஸ் கொள்கைக்கும் வித்தியாசமில்லை!

ஆம்— காங்கிரசின் பழைய போலீஸ் கொள்கையே, அச்சுதமேனனின் போலீஸ் கொள்கை!

அதனால் தான் தினமணி, இந்து போன்ற முதலாளித்துவ ஏடுகள, அச்சுதமேனனின் அமைச்சரவையை வரவேற்றுள்ளன!

அச்சுதமேனன்பற்றி பெருமுதலாளி ராமநாத கோயங்காவின் தினமணி' ஏடு தீட்டியுள்ள தலையங்கம்:—

'' தமது சர்க்காரின் கொள்கைகளை எடுத்த எடுப்பிலேயே விளக்கிக் கூறியிருப்பதை மக்கள் பரவலாக வரவேற்றுள்ளனர்'' ''அமைதி நிலவுகின்ற சூழ்நிலையில் தான் பொருளாதார வளர்ச்சிக்கு வழி பிறக்கும் என்று நினைவூட்டியிருப்பது மிகப் பொருத்தமானது''

—என்று பெருமுதலாளி கோயங்காவின் ஏடு தலையங்கம் தீட்டியுள்ளது. அதன்மூலம் இந்திய முதலாளி வர்க்கத்தின் உள்ளக்கிடக்கையை எடுத்துரைத்துள்ளது.

( இதே 'தினமணி' ஏடுதான்— மன்னர் மானியம் பற்றிய ஜனாதிபதியின் ஆணையை 'தடித்தனமான ஆணை' என்று எழுதியது என்பதை மறந்துவிடக்கூடாது)

சுரண்டும் வர்க்கத்தின் உரிமையை அச்சுதமேனன் அமைச்சரவைப் பாதுகாக்கும் என்ற முழு நம்பிக்கை தான்— 'தினமணி'யை அவ்விதம் எழுதவைத்துள்ளது.

இனி— கடந்த ஒன்பது மாத காலத்தில் கேரளத் தொழிலாளிகளையும், விவசாயிகளையும் சுட்டுக் கொன்றதைப் போலவே— அடக்குமுறை பேயாட்சி நடத்தலாம்.

அதற்கு மத்திய ரிசர்வ் போலீஸ் படையும், ராணுவத் துப்பாக்கிக் குழல்களும் கேரளத்திற்குத் தருவிக்கப்படலாம்

ஆனால் பொங்கியெழும் மக்கள் போராட்டம் எனும் சூறாவளியின் முன்னே அவை சருகுகளாகும் என்பது வரலாறு

## தென்காசியில் போலீசாரின் அட்டூழியம்! உண்மையில் நடந்ததென்ன?

தென்காசியில் அநியாய வீட்டுவரி உயர்வை எதிர்த்து நடந்த ஊர்வலத்தில், போலீஸ் அட்டூழியங்களைப் பற்றியும், துப்பாக்கி சூடு நடந்ததைப் பற்றியும், தென்காசி— செங்கோட்டை தாலுகா கமிட்டி செயலாளர் சி. காளிமுத்து கீழ்வரும் விவரங்களை அனுப்பியுள்ளார்:—

தென்காசியில் வரி எதிர்ப்பு ஊர்வலம் சர்வகட்சி தலைமையில் செப். 26-ல் சுமார் 2 மணிக்கு ஹமீதியா திடலில் இருந்து புறப்பட்டு, முக்கிய நகர வீதிகள் வழியாகச் சென்று, முனிசிபல் அலுவலகத்தை சுமார் 4–30 மணியளவில் வந்தடைந்தது பிரதிநிதிகள் உள்ளே சென்று தலைவரிடம் மனுக்கொடுக்க செல்கையில், தென்காசி சப்-இன்ஸ்பெக்டர் சங்கத்துரை வழியை மறித்துக்கொண்டு ஊர்வலத்தில் சென்ற நபர் ஒருவரை முதலில் அடித்து விட்டார். பிறகு அந்த இடத்தில் ஊர்வலத்தைச்சமாதானப்படுத்தி, அந்த நபரை வெளியே அனுப்பிவிட்டு பிரதிநிதிகள் உள்ளே சென்றார்கள். அவர்களுடன் பொதுமக்களும் உள்ளே சென்றார்கள். அப்பொழுது கதவுகளையும் ஜன்னல்களையும் அடைத்துக்கொண்டு கவுன்சில் கூட்டம் நடத்திக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது தலைவர் மட்டும் வெளியில் வந்து மனுவை வாங்கிக் கொண்டு, உங்களுடைய கோரிக்கைகளை நாங்கள் பரிசீலித்துக் குறைக்க முயற்சி செய்கிறோம் என்றார். இந்த நேரத்தில் வெளியே நின்ற பொதுமக்கள், உடனே வரியைக் குறைக்க வேண்டும் இல்லை என்றால் ராஜினமாச் செய்ய வேண்டும் என்று கூறினார்கள். தலைவர் சட்டப்படி தான் நடக்கமுடியும் என்று கூறிவிட்டு உள்ளே சென்று கதவை மூடிவிட்டார்.

வெளியே நின்றவர் தொடர்ந்து அமைதியாக கோஷங்கள் போட்டுக்கொண்டிருந்தார்கள். போலீஸ் தலையிட்டது. சர்வகட்சித் தலைவர்களும் கலைந்து போகும்படி சொன்னார்கள். அப்பொழுது மணி சுமார் 6–30. மக்கள் கோஷங்களை எழுப்பினர். போலீஸ்காரர்கள் தடியடிப் பிரயோகம் செய்ய ஆரம்பித்தார்கள். அமைதியான ஆர்ப்பாட்டம் தான். திடீரென துப்பாக்கிப் பிரயோகம் செய்தார்கள். அந்த ஸ்தலத்திலேயே கைத்தறி நெசவாளர் குருசாமிஎன்பவர் மாண்டுவிட்டார். பலபேர்கள் காயமடைந்தார்கள். சுமார் எட்டுத்தடவை போலீஸ் சுட்டது. அப்பொழுது கூட்டம் சின்னா பின்னமாக சிதறியது. விழுந்துகிடந்தவர்களை போலீஸ்காரர்கள் தூக்கிச் சென்றார்கள். மக்களிடையே ஆத்திரம் பொங்கி வழிந்தது.

செப். 27-ல் தென்காசியில் சர்வகட்சி சார்பாகக் கண்டனப் போர்டுகளும், மாலை 4 மணிக்குச் சர்வகட்சி சார்பில் மௌன ஊர்வலமும் நடத்தப்பட்டன. கூட்டம் முடிவில் துப்பாக்கிப் பிரயோகத்தைக் கண்டித்தும் மரணம் அடைந்தவருக்கு அஞ்சலி செய்தும் சர்வகட்சிப் பிரதிநிதிகள் பேசினார்கள். பின்பு சர்வகட்சிப் பிரதிநிதிகள் குற்றாலத்திற்குச் சென்று போலீஸ் ஐ. ஜி. யிடம் நிலைமையை எடுத்துக் கூறினார்கள். ஜனங்கள் மத்தியில் பரபரப்பை ஏற்படுத்தியது.

செப். 26-ல் சினிமா தியேட்டர் உள்பட பூரண ஹர்த்தால் அனுஷ்டிக்கப்பட்டது. கைத்தறி நெசவாளர்கள் கலந்து கொண்டார்கள்.

தி. மு. க., லீக் இந்த ஊர்வலத்தில் கலந்துகொள்ளவில்லை. —2–10–70

### அண்ணாமலை நகரில் போராட்டம

அண்ணாமலைப் பல்கலைக் கழக சிப்பந்திகள் சங்கச் சார்பில் சிப்பந்திகளின் சிறப்பு ஈட்டுப்படி பாக்கிக்காக உண்ணாவிரதம் இருப்பது குறித்து விளக்கம் தெரிவித்து 23—9—70 புதன் மாலை சர்வ கட்சி பொதுகூட்டம் நடைப்பெற்றது.

கட்சிக் கிளை ஆதரவு தெரிவித்து, பிரச்சாரம் செய்து, வால்போஸ்டர்கள் ஒட்டியது. 25–9–70 முதல் உண்ணாவிரதம் நடத்துவதற்கு அறிவிப்பு கொடுத்ததும் நிர்வாகிகள், சங்கத்தின் பிரதிநிதிகளை அழைத்து பேசினர் அச்சமயம் அவர்கள் சிறப்பு ஈட்டுப்படி பாக்கியை தருவதாகவும், புதிய துணைவேந்தர் வந்தவுடன் தருவதாகவும் கூறினர். 30–9–70க்குள் தரா விட்டால் 1–10–70 முதல் உண்ணாவிரதம் தொடங்கி போராடுவதாக தீர்மானம் நிறைவேற்றப்பட்டது

சிப்பந்திகள் நடத்தும் இப் பேராட்டத்திற்கு த. மா. சங்கம் முழு ஆதரவு கொடுத்து வருகிறது,

### போடி நகரசபையில் போராட்டம்

போடி நகரசபைக் கூட்டத்தில் நகரசபைத் தலைவரின் எதேச்சாதிகாரப் போக்கை எதிர்த்ததற்காக, போலீஸ் தருவிக்கப்பட்ட போதும் மார்க்சிஸ்ட் கட்சி உறுப்பினர்கள் வெளியேற மறுத்தனர்.

பெண் உறுப்பினர்கள் பெண் போலீஸ் வந்தால்தான் வெளியேறுவோம் என்று சொன்னதன் பேரில், பெண் வார்டன் கொண்டுவரப்பட்டார். 2 மணி நேரத்தாவாவிற்குப் பின் நகரவைத் தலைவரின் சர்வாதிகாரப் போக்கைக் கண்டித்துக்கோஷமிட்ட வண்ணம் மார்க்சிஸ்ட் உறுப்பினர்கள் வெளி நடப்பு செய்தனர். இக்கூட்டத்தில் நகரசபை கமிஷனரை மாற்றவேண்டுமென்ற தீர்மானத்தை மார்க்சிஸ்ட் உறுப்பினர்கள் கொண்டு வந்தனர். இத்தீர்மானத்தை விவாதத்திற்கு விடுவதற்குப்பதில், போலீசை வைத்து மார்க்சிஸ்ட் உறுப்பினர் வேலுசாமியை வெளியேற்ற நகரசபைத் தலைவர் முயன்றார்.

இதன் பேரில் எழுந்தவாக்குவாதத்தில், தீர்மானத்திற்கு முதலில் நகரசபைத் தலைவர் பதில் சொல்லவேண்டுமென்று மார்க்சிஸ்ட் உறுப்பினர் பொன்னம்மாளும், பாக்கியமும் வற்புறுத்தினர்,

வெளி நடப்புச்செய்த மார்க்சிஸ்ட் உறுப்பினர்களுடன் 2 ஆயிரம் பொதுமக்கள் சேர்ந்துகொண்டு — ''நகரசபைத் தலைவரின் எதேச்சாதிகாரம் ஒழிக,'' ''கமிஷனரை மாற்று,'' ''வீட்டு வரியைக் குறை'' போன்ற கோஷங்களை எழுப்பினார்கள்.

# உலக அரங்கில்

## ஜோர்டன் நெருக்கடி

மேற்கு ஆசிய நெருக்கடியில் தலையிட்டு ஜோர்டனை மற்றொரு "கம்போடியா" ஆக்கும் நோக்கத்தில் அமெரிக்க ஏகாதிபத்தியம் கிழக்குமத்திய தரைக் கடல் பகுதிக்கு போர் விமானங்களையும், கப்பல்களையும் அனுப்பிவைத்துள்ளது

இந்தச் சூழ்ச்சிக்கு ஜோர்டன்மன்னர் ஹுசேனும் இடம் கொடுத்து ஜோர்டனில் இராணுவ ஆட்சியைப் பிரகடனப் படுத்தியுள்ளார்.

இஸ்ரேல் பிரதமர் கோல்டா மெயர் அமெரிக்காவுக்குச் சென்றிருக்கும் சமயத்திலும், இஸ்ரேலுக்கும், அரபு நாடுகளுக்கும் இடையே யாரிங் குழு பேச்சு வார்த்தையைத் தொடங்க முடியாதபடி இஸ்ரேல் முட்டுக்கட்டை போட்டிருக்கும் சமயத்திலும் மன்னர் ஹுசேன் ஜோர்டனில் உள்நாட்டு யுத்த நிலைமையையே தோற்றுவித்துள்ளார்.

இஸ்ரேலுக்கு மறைமுக உதவியளிக்கும் இந்தப் போக்கால் ஜோர்டன் மன்னருக்கு எதிராக அரபு நாடுகள் கிளர்ந்துள்ளன.

இஸ்ரேலைத் தாம் எதிர்ப்பதாக ஹுசேன் மன்னர் கூறி வருவதெல்லாம் ஜோர்டனில் வாழும் பாலஸ்தீன மக்களின் நிர்ப்பந்தத்தினாலேயே யாகும். 1967—ம் ஆண்டு யுத்தத்தில் இஸ்ரேலிடம் முதலில் சரணாகதி யடைந்ததும் ஹுசேன் மன்னரின் படைகளேயாகும்.

ஐ. நா. தர்மகர்த்தா பிரதேசமாக இருந்த பாலஸ்தீனத்தில் அமெரிக்காவின் முன் முயற்சியில் உருவானதே இஸ்ரேல்.

இஸ்ரேல் உருவாக்கப்பட்டதும் இலட்சக் கணக்கான பாலஸ்தீன அகதிகள் நாட்டை விட்டு வெளியேறினர். தாங்கள் பிறந்த பூமியில் தாங்கள் வாழ்வதற்காக இஸ்ரேலை எதிர்த்துப் போராடுவதில் பாலஸ்தீன விடுதலை இயக்கம் இன்று ஈடுபட்டுள்ளது.

இந்த இயக்கத்தின் ஒரு அங்கமான ஜார்ஜ் ஹப்பஷ் தலைமையிலுள்ள பாலஸ்தீன விடுதலை முன்னணி ஏகாதிபத்திய நாடுகளுக்குச் சொந்தமான விமானங்களைக்கடத்தும் நடவடிக்கையிலீடுபட்டது.

பிரிட்டன், ஜெர்மனி ஸ்விட்சர்லாந்து முதலிய நாடுகளில் கைதிகளாகவுள்ள பாலஸ்தீன விடுதலை இயக்கத்தைச் சேர்ந்தவர்களை விடுவிப்பதற்காக விமானங்களைக் கடத்தி அதிலிருந்தவர்களை பாலஸ்தீன விடுதலை முன்னணி பணயம் வைத்துள்ளது

இப்படி விமானங்கள் கடத்தப்படுவதை பாலஸ்தீன விடுதலை இயக்கத்தைச் சேர்ந்த அராபுத் தலைமையிலுள்ள அல்படா பிரிவு எதிர்த்தது.

பாலஸ்தீன விடுதலை இயக்கத்தில் ஏற்பட்ட பிளவைப் பயன்படுத்தி அதை நசுக்கிவிடும் முயற்சியில் அமெரிக்காவின் நண்பன் ஜோர்டன் மன்னர் ஹுசேன் இறங்கினார்.

ஹுசேனின் நடவடிக்கையால் பாலஸ்தீன விடுதலை இயக்கத்தில் பிளவு வலுப்பதற்குப் பதில் ஒற்றுமை ஏற்பட்டு அராபட் தலைமையில் பாலஸ்தீன விடுதலைப் படை ஹுசேனின் இராணுவத்துடன் மோதியது. இதனால் ஜோர்டான் தலைநகரான அம்மானில் இரத்த ஆறே ஓடிற்று.

ஹுசேனின் நடவடிக்கையை ஐ. அ. குடியரசு கண்டித்துள்ளது. சிரியாவும் இராக்கும் பாலஸ்தீன விடுதலைப் படையினருக்குத் தீவிர ஆதரவளிக்கின்றனர்.

இந்நிலையில் கெய்ரோவில் நடைபெற்ற 8 நாடுகள் கலந்துகொண்ட உச்சகட்ட மாநாட்டில் ஹுசேன் மன்னருக்கும் அராபட்டுக்கும் இடையே 14 அம்ச போர் நிறுத்த உடன்பாடு கையெழுத்தாகியுள்ளது.

ஏகாதிபத்திய நாடுகளின் கைப்பாவையான ஹுசேன் மன்னர் அரபு நாடுகளின் தேசிய எழுச்சியின் முன் பணிந்துள்ளார். ★

## நாசர் மறைவு

அரபு நாடுகளின் முக்கிய தலைவர்களில் ஒருவரான நாசர் நெருக்கடியான கால கட்டத்தில் மறைந்தது அந்நாடுகளுக்கு பேரிழப்பாகும்.

மேற்கத்திய நாடுகளின் சுரண்டலுக்குக் கதவைத் திறந்து விட்டு விட்டு சுகபோகத்தில் எகிப்து மன்னர் பரூக் திளைத்துக்கொண்டிருந்தபோது 18 ஆண்டுகளுக்கு முன் அந்த கொடுங்கோல் மன்னன் ஆட்சியிலிருந்து 'இராணுவப்புரட்சி' மூலம் எகிப்தை விடுவிப்பதில் நாசர் முன்னணியில் நின்றார்.

எகிப்தை வளப்படுத்துவதற்கு அஸ்வான் அணை கட்டுவதற்கு மேற்கத்திய உதவியை நாசர் நாடி நின்றார். அந்த உதவி கிடைக்காத நிலையில் அவர் சோவியத் உதவியைக் கோரினார்.

ஏகாதிபத்திய எதிர்ப்புப் போராட்டத்தில் சூயஸ் கால்வாயை தேசியவுடைமை யாக்கினார்.

இத்தகைய ஏகாதிபத்திய எதிர்ப்பு நடவடிக்கைகள் அரபு மக்களிடையே புத்தெழுச்சியை உண்டாக்கியது. எனினும் இஸ்ரேலை எதிர்ப்பதில் நாசர் வழி வெற்றி யடைந்தது என்று கூற முடியாது. சின்னஞ்சிறு இஸ்ரேலை எதிர்த்து நிற்பதற்கு 10 கோடி மக்களைக்கொண்ட அரபு நாடுகளால் முடியவில்லை.

உள்நாட்டு முதலாளித்துவ கொள்ளையைத் தடுத்து உழுபவனுக்கு நிலம் வழங்கி மக்களுக்கு. ஜனநாயக உரிமைகள் வழங்கப்பட்டிருந்தால் தாயகத்தைக் காப்பதற்கு வியத்நாமில் காண்பது போன்ற மக்கள் வீறு கொண்டெழுந்திருப்பர். அத்தகைய எழுச்சியை அரபு மக்களிடம் காண முடியவில்லை.

நாசர் துவக்கிய ஏகாதிபத்திய எதிர்ப்புப் போராட்டத்தில் உருவாகும் புதிய தலைமை இந்தக் குறைபாட்டைக் களைவதில்தான் அரபு மக்களின் எதிர்காலம் அமைந்துள்ளது.

★

## நிக்சனுக்கு எதிர்ப்பு

ஐந்து ஐரோப்பிய நாடுகளுக்கு 8-நாள் விஜயத்தை அமெரிக்க அதிபர் நிக்சன் மேற்கொண்டுள்ளார்.

இஸ்ரேலுக்கு ஊக்கமளிக்கவும், ஜோர்டன் மன்னனுக்கு உதவி அரபு நாடுகளிடையே பிளவை உண்டாக்கவும் இதற்காக தனது மத்தியதரைக் கடல் கப்பல் படையை வலுப்படுத்தி அங்குள்ள நாடுகளை இச்சதியில் இணைக்கவுமே நிக்சன் இங்கு வந்தார்.

இத்தாலி தலைநகர் ரோமுக்கு நிக்சன் வந்தபோது போலீசுக்கும் நிக்சன் எதிர்ப்பாளர்களுக்கும் இடையே பல இடங்களில் மோதல் ஏற்பட்டது.

அமெரிக்க கம்பெனிஒன்றின் கண்ணாடி ஜன்னல்களை ஆர்ப்பாட்டக்காரர்கள் நொறுக்கினார்கள்.

போலீஸ் காவலையும் மீறி ஆர்ப்பாட்டக்காரர்கள் அமெரிக்கத் தூதரகத்துக்குள் பிரவேசித்தார்கள்.

சூயசுக்கு கிழக்கே தன்னுடைய ஆதிக்கத்தை விடுவதற்கு முடிவு செய்திருக்கும் பிரிட்டனிடம் இந்தப்பகுதியிலிருந்து பிரிட்டிஷ் கடற்படையை பூரணமாக வாபஸ் பெறாமலிருக்குமாறும் நிக்சன் கேட்டுக் கொண்டுள்ளார்.

நிக்சனின் திட்டத்துக்கு அமெரிக்காவிலும் வெளி நாடுகளிலும் கடும் எதிர்ப்புக் கிளம்பியுள்ளது என்பதற்கு இத்தாலியிலும் பிரான்சிலும் எழுந்த எதிர்ப்புகள் உதாரணங்கள்.

இவ்வாறு ஏகாதிபத்திய எதிர்ப்பு உணர்ச்சிகொண்ட மக்கள் போராடும்போது சர்வதேசத் திருத்தல்வாதத் தலைவர்களில் ஒருவரான யுகோஸ்லோவியத் தலைவர் டிட்டோ நிக்சனை வரவேற்று விருந்துபசாரமளித்து கட்டித் தழுவினார்.

## சிலி நாடும் சதிகாரர்களும்

தென் அமெரிக்க நாடான சிலிநாட்டின் அதிபர் பதவிக்கு ஐக்கிய மக்கள் முன்னணியின வேட்பாளரான டாக்டர் சால்வடார் அலன்டி தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார்.

வலதுசாரி சக்திகளின் வேட்பாளரான அலஸ்ஸன்டரியை (தேசிய ஜனநாயகக் கட்சி) விட 39338 ஓட்டுகள் அதிகமாக வாங்கி அலன்டி வெற்றி பெற்றிருக்கிறார்.

மூன்றாவது வேட்பாளர் ரடாமிரோ டோமிக்கும் போட்டியிட்டுள்ள நிலையில் மொத்த ஓட்டுகளில் பாதிக்கு மேல் வாங்காததால் அலன்டியின தேர்வை தேசிய காங்கிரஸ் (நாடாளுமன்றகூட்டம்) உறுதிப்படுத்த வேண்டும்.

எனினும் அலென்டியின் தேர்வை நாடாளுமன்றம் உறுதிசெய்யும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

அலென்டி ஒருமார்க்சிஸ்டும், சிலி சோஷலிஸ்ட் கட்சியைச் சேர்ந்தவரும் ஆவார். அவர் கியூபா, வட கொரியா, வட வியட்நாம், மாஸ்கோ, சீனா முதலிய நாடுகளுக்குச் சென்றுள்ளார்.

சிலியின் தாமிர உலோக உற்பத்தியை மூன்று அமெரிக்கக் கம்பெனிகள் ஆதிக்கம் வகிக்கின்றன. இந்த உற்பத்தியை நாட்டுடைமை ஆக்கவும் நிலச் சீர்திருத்தம் செய்யவும் வாககளித்தத சென்ற முறை (1964ல்) கிறிஸ்தவ ஜனநாயக கட்சி வேட்பாளர் பெரி, பதவிக்கு வந்தும் வாக்குறுதிப்படி அவர் நடக்காததால் மக்களிடம் அதிருப்தி வளர்ந்தது.

பெரியின் ஆறுண்டு ஆட்சியில் வாக்களிததபடி 1 லட்சம் குடும்பங்களுக்குப் பதில் 18 ஆயிரம் பேருக்கே நிலம் கிடைத்தது.

இப்போது சிலியின் முன் தோன்றியுள்ள இரு பிரச்னைகள் பண வீக்கமும் அரசியல் சட்ட மாறுதலுமேயாகும்.

சிலியின் அரசியல் சட்டம் அமெரிக்க மாதிரியில் அமைந்துள்ளது. நிர்வாக அதிகாரமுள்ள ஜனாதிபதியும் செனட்டும், பிரதிநிதிகள் சபையும் இதன்படி அமைந்துள்ளனர்.

அலென்டிக்கு செனட் சபையில் சொற்ப மெஜாரிடியே யுள்ளது. 200 பேர் கொண்ட பிரதிநிதிகள் சபையில் அவருடைய கட்சிக்கு 80 இடங்களே உள்ளன.

அடுத்த சில மாதங்கள் சிலிக்கு சோதனைமிக்க காலமாகும். வலதுசாரி சக்திகள் ஓலம் வலுத்து வருகிறது. இராணுவம் குறுக்கிடாதிருந்தால் அக்டோபரில் அதிபர் தேர்தல் நடைபெறும் என்று லண்டன் பத்திரிகை "எக்னாமிஸ்ட்" எழுதியிருந்தது.

தென் அமெரிக்காவில் மற்றொரு கியூபா உருவாகவிடமாட்டோம் என்று முழங்கிய முன்னாள் அமெரிக்க அதிபர் ஜான்சன் டொமினிகன் குடியரசில் மக்கள் எழுச்சியை அடக்க 20 ஆயிரம் துருப்புகளை அனுப்பியதையும் யாரும் மறந்திருக்க முடியாது.

— ஆ. ச.

### சாலையோர வியாபாரி சங்கம்!

மதுரை சாலையோர வியாபாரிகள் சங்க மாநிலப்பாதுகாப்புக்குழு கூட்டம் நடைபெற்றது. புது நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். தோழர் சுந்தரராஜன் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

சாலையோர வியாபாரிகள் குறித்து மதுரை சட்டமன்ற உறுப்பினர் கே. பி. ஜானகியம்மாள் தமிழக சட்டமன்றத்தில் தீர்மானம் கொண்டு வந்துபேசியதற்கு இக்கூட்டம் நன்றிதெரிவித்தது.

### தேனி டிவிஷன் மின்தொழிலாளர் கூட்டம்

மதுரை - இராமநாதபுரம் திட்ட மின்வாரியத் தொழிலாளர் சங்கம் டிவிஷன் வாரியாக மாநாடு நடத்தத் திட்டமிட்டது.

அதன் அடிப்படையில் தேனி டிவிஷன் தொழிலாளர்களின் மாநாடு செப்டம்பர் 6 அன்று தேனியில் நடைபெற்றது. தோழர் எம். மீனாட்சிசுந்தரம் தலைமை வகித்தார். டிவிஷன் முழுவதிலுமுள்ள சகல பிரிவுகளில் இருந்து சுமார் 150 பிரதிநிதிகள் கலந்துகொண்டனர்.

சி. ஐ. டி. யூ. வுடன் தங்களது சங்கத்தை இணைப்பது என்று தீர்மானிக்கப்பட்டது.

"தமிழ்நாடு மின் தொழிலாளர்களின் மத்திய அமைப்புடன்" தங்களது இணைப்பதென்றும் தீர்மானிக்கப்பட்டது.

சங்க வளர்ச்சி நிதி முதல் தவணையாக ரூ. 651 பொருளாளரிடம் வழங்கப்பட்டது.

### ராகவன் டிரான்ஸ்போர்ட் தொழிலாளர் போராட்டம்

சம்பள போர்டு சிபாரிசுகளை அமுலாக்கக் கோரியும் பழிவாங்குதலை எதிர்த்தும் பாளையங்கோட்டை ராகவன் டிரான்ஸ்போர்ட் தொழிலாளர்கள் செப்டம்பர் 20-ம் தேதி முதல் நடத்திவரும் சங்கிலித் தொடர் உண்ணாவிரதப் போராட்டத்துக்கு தொழிலாளர்களும், பொதுமக்களும் பேராதரவு நல்கி வருகின்றனர்.

நிர்வாகத்தின் தொழிலாளர் விரோதப் போக்கை எதிர்த்து செப். 19-ல் சர்வகட்சிக் கூட்டமும் நடைபெற்றது.

உண்ணாவிரதப் போராட்டத்துக்கு ஆதரவு தெரிவிக்கும் முறையில், நெல்லை மாவட்ட தி. மு. கழகச்செயலாளர் திரு. இரத்தினவேல் பாண்டியன், உண்ணாவிரதப் பந்தலுக்கு வந்து ரூ 5 நன்கொடை வழங்கினார். மற்றும் பாளையங்கோட்டை நகரசபைத் தலைவர் திரு. நாராயணன், நகரசபை உதவித் தலைவர், உறுப்பினர் ஹுசேன், பாலவிநாயகம் பழைய காங்கிரஸ் தலைவர் திரு கணேசசுந்தரம், சி. எம். சுப்பையா ஆகியோரும் போராட்டத்துக்கு ஆதரவு தெரிவித்து நன்கொடை வழங்கினர்.

மற்ற மோட்டார் கம்பெனி தொழிலாளர்களும் பேட்டை மில் தொழிலாளர்களும் மின்சாரத் தொழிலாளர்களும், தாழையூத்து மேலப்பாளையம் தொழிலாளர்களும் பெருந்திரளாக வந்து போராட்டத்துக்கு சகல வழிகளிலும் உதவி செய்வதாக உறுதி கூறினர்.

# மாநில அரசு ஊழியர்களுக்கு இடைக்கால நிவாரணம் தருக

## மதுரை என். ஜி. ஓ. மாநாட்டுத் தீர்மானம்

மதுரை மாவட்ட என். ஜி. ஓ. வினரின் நான்காவது மாநாடும், அனைத்து மாநில அரசு ஊழியர்களின் முதல் மாநாடும் மதுரை சேதுபதி உயர் நிலைப் பள்ளியில் நடைபெற்றது.

அக்டோபர் 4-ம் நாள் நடந்த இம்மாநாடு, மாநில அரசு ஊழியர்களுக்கு இடைக்கால நிவாரணம் வழங்க வேண்டுமென்று தீர்மானம் நிறைவேற்றியுள்ளது. அக்டோபர் மாத இறுதிக்குள் முடிவு தெரியவில்லையெனில், நேரடி நடவடிக்கையில் ஈடுபட நேரிடும் என்றும் இம்மாநாடு தீர்மானம் இயற்றியுள்ளது.

மாநாட்டிற்கு முன்பு, ஒரு மாபெரும் ஊர்வலம் நடைபெற்றது. மகத்தான அந்த ஊர்வலம், தமிழக என். ஜி. ஓ-வினரின் மன எழுச்சியினை காட்டுவதாக விளங்கியது.

பின்னர் நடந்த மாநாட்டிற்கு, திரு. உலகநாதன் தலைமை வகித்தார்.

அகில இந்திய அரசு ஊழியர் சம்மேளனப் பொதுக்காரியதரிசி தோழர். ஸ்ரீ ராமுலு மாநாட்டை துவக்கி வைத்தார்.

அவர் பேசுகையில் குறிப்பிட்டதாவது :—

மத்திய அரசு ஊழியர்களுக்கும். மாநில அரசு ஊழியர்களுக்கும் இடையே சம்பளம் பஞ்சப்படி ஆகியவற்றில் உள்ள வித்தியாசத்தைப் போக்கக்கோரி-அடுத்த ஆண்டு அல்லது 1972—தொடக்கத்தில் ஒன்றுபட்ட இயக்கம் நடத்த சம்மேளனம் கருதியுள்ளது.

அதற்குள் மத்திய அரசாங்க ஊழியர்களின் ஊதியக் குழு அறிக்கை முமவ பெறுவிடும். அப்போது மத்திய அரசாங்க ஊழியர்களுக்கும், மாநில அரசு ஊழியர்களுக்கும் இடையேயுள்ள சம்பள வித்தியாசம் மேலும் அதிகரிக்கும்.

எனவே இவ்வேறுபாட்டினை போக்கக்கோரி- ஒரு ஒன்றுபட்ட இயக்கம் நடத்துவது அத்யாவசியமானதாகிறது.

இந்தியாவில் உயர்ந்த பட்ச ஊதியம் பெறுவோருக்கும், குறைந்தபட்ச ஊதியம் பெறுவோருக்கும் உள்ள இடைவெளி 1:70 என்ற விகிதத்தில் உள்ளது. ஆனல்—பிரிட்டனில் அது 1:6 என்ற விகிததிலும் அமெரிக்காவில் 1:12 என்ற விகிதத்திலும் உள்ளது.

பிரிட்டிஷ் ஆட்சிக்காலத்தில், யுத்த அலவன்ஸ் என்று முதன் முறையாக வழங்கப்பட்டது. விலைவாசி உயர்வினை சரிக்கட்டுவதற்காக அரசாங்க ஊழியர்களுக்கு யுத்த அலவன்ஸ் வழங்கப்பட்டது அதுதான் பின்பு பஞ்சப்படி என்று மாற்றப்பட்டது.

அதற்குப்பிறகு, எந்த ஒரு மாநிலத்திலும் பஞ்சப்படி திருத்தி அமைக்கப்படவில்லை.

எனவே, ஒரு தேவை அடிப்படையிலான ஊதியம் பெறுவதற்கு ஒன்றுபட்ட முயற்சியினை மேற்கொள்ள வேண்டும்.

ஊதியக்குழுக்கள் அமைக்கப்படும் விதமும், அவை சமர்பிக்கும் அறிக்கைகள் பற்றி மந்திரி சபை மட்டத்தில் காட்டப்படும் தயக்கமும்- ஒவ்வொருவருக்கும் ஏமாற்றத்தை அளிக்கவல்லனவாக உள்ளன. எனவே வேலைப்பளுவிற்கு ஏற்ப, சம்பளமும், பஞ்சப்படியும் நிர்ணயிக்க, ஐந்து ஆண்டுக்கு ஒருமுறை நேரடிப் பேச்சு வார்த்தையில் ஈடுபட வேண்டும்.

இத்தகைய ஊதியக் கோட்பாடு ஒன்றினை தேசிய மட்டத்தில் அடைவதற்கு மத்திய அரசு ஊழியர்களும் மாநில அரசு ஊழியர்களும் ஒன்றுபட்டு நிற்பது மிக அவசியம். அது ஒன்றுபட்டு நிற்கும் தொழிலாளி வர்க்கத்திற்கும் பயனளிக்கக்கூடியதாக விளங்கும்-என்று தோழர் ஸ்ரீராமுலு புள்ளி விபரங்களுடன் தெளிவாக எடுத்துரைத்தார்.

அடுத்து. பிரதிநிதிகளை வரவேற்றுப் பேசிய திரு சீனிவாசன் கூறியதாவது:-

தமிழக அரசு ஊழியர் சங்கங்களின் சம்மேளனம் அமைக்கப்படுகிறதென்றவுடன், மொத்தம் உள்ள 120 சங்கங்களில் 25 சங்கங்கள் உடனே இணைந்துவிட்டன.

அகில இந்திய சம்மேளனத்தின் கோரிக்கைகளுக்கு எங்களது அசைக்க இயலாத ஆதரவினை தெரிவித்துக் கொள்கிருேம்.

அரசாங்க ஊழியர்களுக்கு தொழிற்சங்க உரிமைகள் வேண்டும். இந்த உரிமை அளிக்க அரசு மறுத்து வருகிறது.

தொழிற்சங்க உரிமைகளை மறுப்பது மட்டுமின்றி இத்தகை கோரிக்கைகளுக்காகப் போராடும் சங்கங்களுடன் ஒருங்கிணையும் உரிமையையும் மறுக்கின்றனர்.

20 ஆண்டுகளுக்கு மேலாக, மாநில அரசு ஊழியர்கள் இக்கோரிக்கைகளுக்காகப் போராடிவருகின்றனர்.

ஐந்தாண்டுத் திட்டங்கள் நிறைவேற்றப்பட்டதன் விளைவாக, தேசிய வருமானம் அதிகரித்துள்ளது ஆனல் அரசாங்க ஊழியர்களின் ஊதியம் மிக மோசமான நிலைக்குத் தாழ்ந்துள்ளது.

போராட்டங்கள் மூலமாகவும், ஆர்ப்பாட்டங்கள் மூலமாவும் ஊதியக்குழுக்களை நியமிக்க முடிந்தது ஆனல் இந்தஊதியக்குழுக்களின் சரித்திரத்தைப் பார்த்தால், ஒரு பிரிவினரை மற்றொரு பிரிவினருக்கு எதிராகமோத விடுவதைக்காணலாம்; அடிப்படைத் தேவைகளை நிராகரிப்பதைக் காணலாம்; இந்தப் பழைய கதை மீண்டும் தொடருவதற்கு அனுமதிக்கக் கூடாது. எனவே தேவை அடிப்படையிலான குறைந்தபட்ச ஊதியம்வழங்கப்படவேண்டும் என்பது நமது அடிப்படையான கோரிக்கையாகும்.

அரசு ஊழியர்களின் ஊதியம் திருத்தி அமைக்கப்படவேண்டும் என்று நாம் கூறும்போதெல்லாம், அரசாங்க ஊழியர்கள் நிலையான ஊதியம்பெறும் குழுவினைச் சார்ந்தவர்கள் என்று கூறுகின்றனர். கிராமங்களிலே, கோடிக் கணக்கானவர்கள் பட்டினி கிடக்கிருர்கள் என்றும் கூறுகிருர்கள்.

கிராமப்புற விவசாயிகள் பட்டினி கிடக்கவேண்டியுள்ளது என்ருல், அதற்குக் காரணம் அரசாங்கத்தின் தவருன பொருளாதாரக் கொள்கைகளும் திட்டங்களுமே.

பட்டினியால் வாடும் கோடிக்கணக்கான மக்களைச் சுட்டிக்காட்டும் அரசாங்கம், கிட்டத்தட்ட ஒரு மாற்று அரசாங்கமே நடத்திக் கொண்டிருக்கும் கறுப்புப்பணம்பற்றி குறிப்பிடாதது ஏன்? 75 பெரு முதலாளிகளின் கையில் குவிந்துகிடக்கும் செல்வாதாரம்பற்றி குறிப்பிடாதது ஏன் ?' என்று திரு சீனிவாசன் குறிப்பிட்டார்.

திரு. உலகநாதன் சம்மேளனம் அமைக்கப்படுவதை வரவேற்ருர்.

மற்றும் திருவாளர்கள் சிவ. இளங்கோ, எஸ். சிவசுப்ரமணியன், ஏ. எம். சிங்கராயர், ஜே. எஸ். ராஜு, புலவர்ராஜாமணி ஆகியோர் உரையாற்றினர்.

இம்மாநாட்டினை ஒட்டி ஒரு மலர் வெளியிடப்பட்டது. அதனை தமிழக ரெவின்யூ அதிகாரிகள் சங்கத்தலைவர் திரு. ஆர். ஏ. கூடலிங்கம் வெளியிட்டார்.

கேரள மாநில என். ஜி. ஓ. சங்க பொதுச் செயலாளர் தோழர் ஈ பத்மனபன், இம்மாநாட்டிற்கு தன் சகோதர வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொண்டார்.

மாலையில் திரு. இரத்னகிரி, நவாப்ஜான், பி. எஸ். ராமநாதன், எஸ். பூசை, எஸ். செல்வரங்கம் இ. இம்மானுவேல், துரையப்பன் ஆகியோர் பேசினர் !

---

### மாணவர் சங்க அறிவிப்பு!

தமிழக மாணவர் சங்க விரோத நடவடிக்கைகளிலும் பிரச்சாரத்திலும் ஈடுபட்டுவருகின்ற காரணத்தினல், தமிழக மாணவர்சங்கமாநிலத்தலைவர் ஆர். இராமசாமி-தலைவர் பதவியிலிருந்தும், உறுப்பினர் தகுதியிலிருந்தும் நீக்கப்பட்டுவிட்டார் என்பதைத் தெரிவித்துக் கொள்கிருேம்.

மாநிலசெயற்குழு
தமிழக மாணவர் சங்கம்

# மத்திய அரசு ஊழியர்களின் ஆர்ப்பாட்ட ஊர்வலம்!

மத்திய அரசு ஊழியர்களுக்கு அளிக்கப்பட்ட நிவாரணம் போதாது என்றுகோரி— மதுரையில் உள்ள மத்திய அரசு ஊழியர்கள் ஆர்ப்பாட்ட ஊர்வலம் நடத்தினர்.

1500—க்கு மேற்பட்ட ஊழியர்கள் ஊர்வலத்தில் பங்கு கொண்டனர்.

ஊர்வலத்தில் —

''வேண்டாம்! வேண்டாம்!!
பிச்சைக்காசு''

''எல்லோருக்கும் ரூ 70
இடைக்கால நிவாரணம்
கொடு''

என்பது போன்ற கோஷங்களை ஆவேசத்துடன் முழக்கி வந்தனர்.

மதுரையில் உள்ள பல்வேறு மத்திய அரசு அலுவல்களைச் சார்ந்த ஊழியர்கள் ஆர்ப்பாட்ட ஊர்வலத்தில் பங்கு கொண்டனர்.

ஊர்வலத்திற்குப் பிறகு பொதுக்கூட்டம் நடைபெற்றது. கூட்டத்தில் சர்வகட்சியைச்சார்ந்தவர்களும் உரையாற்றினர்.

பொதுக்கூட்டத்துக்கு டி. மழுவேசகரன் தலைமை தாங்கினுர். எஸ். ராகவன் நன்றி கூறினுர்.

## பொதுக் கூட்டங்கள்.

**தோழர் எம். ஆர். வெங்கட்ராமன் எம். பி. :-**

அக்டோபர் 16 ... நாகர்கோவில்
,, 17 ... ஸ்ரீவைகுண்டம்
,, 18 ... பாளையங்கோட்டை

**தோழர் ஏ. பாலசுப்ரமணியம் எம். எல். ஏ. :-**

அக்டோபர் 17, ,, 18 ... தஞ்சை மாவட்டம்
,, 19, ,, 20 ... தென்ஞற்காடு மாவட்டம்

**தோழர் என். சங்கரய்யா எம். எல். ஏ. :-**

அக்டோபர் 16 ... சென்னை
,, 18, ,, 19 ... வடாற்காடு மாவட்டம்
,, 23 ... சென்னை

**தோழர் ஆர். உமாநாத் எம். பி. :-**

அக்டோபர் 10, ,, 11 ... இராமநாதபுரம் மாவட்டம்
,, 15, ,, 16 ... மதுரை மாவட்டம்

**தோழர் கே. ரமணி எம். பி. :-**

அக்டோபர் 11, ,, 17 ... திருச்சி மாவட்டம்

## தீக்கதிர் நாளிதழ் நிதி

| | | |
|---|---|---|
| முன் வசூல் ; | 7918 | 04 |
| வெங்கிட்டியம்பாளையம் தங்கமுத்து— தெய்வானை திருமணம் | 5 | 00 |
| வெங்கிட்டியம்பாளையம் வி. எம். காந்தி | 1 | 00 |
| குளத்துப்பாளையம் தங்கமுத்து | 1 | 00 |
| குளத்துப்பாளையம் சின்னுசாமி | 1 | 00 |
| அர்த்தநாரிபாளையம் ஏ. பி. பி. ராமசாமி | 1 | 00 |
| தர்மத்துப்பட்டி கிளை | 15 | 00 |
| பள்ளப்பட்டி கிளை | 15 | 00 |
| பழைய வத்தலகுண்டு கிளை | 15 | 00 |
| கொண்டயம்பட்டி அனுதாபிகள் ஆர். பாலுசாமி, நவநீதகிருஷ்ணன் | 10 | 00 |
| மன்னவனூர் விவசாய சங்கம் | 10 | 00 |
| தங்கையாபுரம் கிளை | 10 | 00 |
| எப்போதும்வென்ருன் ஊராட்சி தலைவர் பொன்னுசாமி | | |
| தனலெக்ஷிமி திருமணம் | 10 | 00 |
| கடலூர் ராலீஸ் இந்தியா தொழிலாளர்கள் | 10 | 00 |
| நெல்லை மாவட்ட மின்சார தொழிலாளர்கள் | 17 | 00 |
| மதுரை கருப்பணன் மூலம் | 30 | 00 |
| நெல்லை பி. நெல்லையப்பன் | 1 | 00 |
| ,, ஏ. சுப்ரமணியம் | 1 | 00 |
| | 8071 | 04 |

# இந்திராவின் கூற்றும் வலதுகளின் கோபமும்!

அண்மையில் இந்திர காந்தி கூறியதோர் உண்மை, வரலாற்றின் ஏடுகளில் அழியாது நிற்கும். அவர் அவ்விதம் கூறியதுதான் என்ன?

''நங்கள் வலது கம்யூனிஸ்டுகளுடையத் திட்டங்களை ஆதரிக்க வில்லை. வலது கம்யூனிஸ்டுகள்தான் கங்கிரசை ஆதரிக்கிறார்கள். காங்கிரஸ் ஒன்று பட்டிருந்த காலத்தில் எந்த எந்தத் திட்டங்களையும், கொள்கைகளையும் கொண்டிருந்ததோ- அந்த திட்டத்திலிருந்து ஒரு மில்லி மீட்டர் கூட இண்டிகேட் மாறவில்லை,, —என்று குறிப்பிட்டிருக்கிறார்!

வால் பிடிப்பது வலது கம்யூனிஸ்டுகள்தான் என்பதனை வெளி உலகிற்கு தைரியத்துடன் எடுத்துக்கூறிய திருமதி இந்திரா காந்திக்கு நம்முடைய பாராட்டுகள்!

(வலது கம்யூனிஸ்டுகள் நம் மீது கோபித்துப் பயனில்லை! பாவம்! அவர்களை அம்பலப் படுத்தியது அவர்களுடைய 'முற்போக்கு' காங்கிரசின் தலைவிதான்.)

## இண்டிகேட் வாக்குகள்!

வலது கம்யூனிஸ்டுத் தலைவர்களால் இந்த அபாயகரமான உண்மையை மறுக்க முடியவில்லை! இந்திரா காந்தியின் கூற்றினில் உள்ள உள்ளடக்கத்தை உணர்ந்து கொண்ட கேரள இண்டிகேட் காங்கிரஸ்காரர்களும் - வலது கம்யூனிஸ்டுகளுடன் தொக்கியுள்ள ''கம்யூனிசம்'' என்ற பெயர் பற்றிக கவலைப்படாமல், கம்யூனிஸ்டு வேட்பாளர்களுக்கு வாக்களித்தனர்.

ஆனல் வலது கம்யூனிஸ்ட் தலைவர்களுக்கு ஒரு பிரச்சனை! அது என்ன வெனில், இந்திரா காந்தியின் வெளிப்படையான அறிக்கையினல் மனம் உறுத்தப்பட்ட தன்னுடைய அணியினரை திருப்தி படுத்துவது எப்படி? அதுதான் வலது கம்யூனிஸ்டுகளை வாட்டி வதைத்த பிரச்சினை!!

வலது கம்யூனிஸ்ட் பத்திரிகையான ''நியூரஜ்'' வார ஏட்டில் (செப்டம்பர் 20) இது பற்றி குறிப்பிடப்பட்டிருப்பதாவது :—

''இந்திரா காந்தியின் இவ்வித கூற்று 'சிறு பிள்ளைத் தனமான தற்புகழ்ச்சியாகும். என்ன இருந்தாலும், இந்திரா காந்தி தேசிய பூர்ஷ்வா ஆட்சிக்குத் தலைமை வகிப்பவர் தானே'' என்று ''நியூ ஏஜ்'' குறிப்பிட்டுள்ளது. அதே இதழில்—தலையங்கம் பீற்றிக் கொள்வது என்ன தெரியுமா?

''தேர்தலில் லாப நட்டம் எப்படியிருந்தாலும், வலது கம்யூனிஸ்ட், பி. எஸ். பி, ஆர். எஸ். பி முஸ்லீம் லீக் ஆகியவற்றைக் கொண்ட ஐக்கிய முன்னணியும் ஆளும் காங்கிரசும் சேர்ந்து சரியான கண்ணோட்டத்துடன் ஒரு மாபெரும் அரசியல் போராட்டம் நடத்தியதை மறுக்க முடியாது''— என்று ''நியூஏஜ்'' பத்திரிகை பீற்றிக்கொண்டுள்ளது.

இந்திரா காந்தியின் அறிக்கை கேட்டு-கோபமடைந்தவர்களைப்போல் போல காட்டிக்கொள்ளத்தான்—

''இந்திரா காந்தியின் சிறுபிள்ளைத்தனமான தற்புகழ்ச்சி'' என்று குறிப்பிட்டனர்.

## வலதுகள் கொள்கையை விட்டார்கள்

ஏனெனில், ஆளும் காங்கிரஸ் கட்சிக்கு எதிரானதோர் ஐக்கிய முன்னணி அமைப்பது என்ற அவர்களுடைய பழைய கோஷத்தை விட்டு விட்டவர்கள் அவர்களே! இந்த அவமானகரமான உண்மையை அவர்களால் மறுக்கமுடியாது. காங்கிரசை எதிர்ப்பதற்காக— ஜனசங்கம் சுதந்திரா, ராம் கார்ராஜா ஆகியோருடன் சேர்ந்து பஞ்சாபிலும், பீஹாரிலும், உத்திரப்பிரதேசத்திலும் கூட்டணி அரசாங்கம் அமைத்தவர்கள் இந்த வலது கம்யூனிஸ்டுகள்.

ஆனல் இன்று ஆளும் காங்கிரசுடன் கூட்டுசேர முன் வந்துள்ளனர்.

அந்த காங்கிரசோ— ஒன்று பட்டிருந்த காங்கிரசின் வர்க்கத் தன்மையையோ, கொள்கையையோ மாற்றிக்கொள்ள வில்லை என்று திருமதி இந்திராகாந்தியே கூறுகிறார்.

எனவே— தங்களது பழைய கொள்கையிலிருந்து வழுவி— இந்திரா காந்தி கூறிய வண்ணம் காங்கிரசிற்கு வால்பிடிக்கத் தொடங்கியது வலது கம்யூனிஸ்டுகள்தான்!

பழைய ஒன்று பட்ட காங்கிரசின் கொள்கைகளையும் திட்டங்களையும் - இம்மியும் மீறுமல் அப்படியே வைத்திருப்பதாக இந்திரா காந்தியே கூறுகிறார்!

ஆனல் வலது கம்யூனிஸ்டுகளோ, இந்திரா காங்கிரசின் கொள்கைகளும், திட்டங்களும் முந்தைய காங்கிரசிலிருந்து மாறுபட்டவை என்று பொய்யுரைக்கின்றனர்.

இந்திராகாங்கிரஸ் — தனது கொள்கைகளையும் வர்க்கத் தன்மையையும் மாற்றிக் கொண்டு விட்டது என்பதற்குப் போதுமான சான்றுகளை அளிக்க வலது கம்யூனிஸ்டுகள் தவறி விட்டனர். அதற்கு மாருக- ''தேசிய பூர்ஷ்வா வாகக ஆட்சிக்கு இந்திரா காந்தி தலைமை வகிக்கிறார்'' என்று கூறுகின்றனர்.

1955-ம் ஆண்டிலிருந்து ஜவஹர்லால் நேரு ஆட்சியையும் 'தேசிய பூர்ஷ்வா ஆட்சி'' என்றுதான் வலது கம்யூனிஸ்டுகள் கூறி வருகின்றனர். இப்போது இந்திரா காங்கிரஸ் ஆட்சியையும்— ''தேசிய பூர்ஷ்வா ஆட்சி' என்ற ஏமாற்றுத்தனமான வார்த்தைகளினல் அழைக்கின்றனர்.

## காங்கிரசின் வர்க்கத்தன்மை மாறவில்லை

ஆனல், 20 ஆண்டுகால காங்கிரஸ் ஆட்சியின்போது— இந்த ஆட்சியின் வர்க்கத் தன்மை என்னவென்பது தெளிவாக வெளிப்பட்டுவிட்டது. இந்த ஆட்சி—பெரு முதலாளித்துவ — நிலப்பிரபுத்துவ ஆட்சியே—என்பது வெளிப் பட்டுவிட்டது.

எனவே, வலதுகள் வால் பிடிப்பது பற்றி இந்திரா காந்தி கூறியது முழுக்க முழுக்க உண்மையாகும்! ஆகவே, இந்த வலது கம்யூனிஸ்டு துரோகிகளுக்கு இதுபற்றி ஓலமிடவும், புகார் சொல்லவும் இனி அருகதை யில்லை.

இந்த விஷயத்தில் உண்மை கூறிய இந்திரா காந்தி, கேரளத் தேர்தலின்போது கணக்கற்ற பொய்களையும் அள்ளி வீசினர்.

கேரள வாக்காளர்களிடையே அவர் கூறியதாவது :—

''இந்தியா கடினமான கால கட்டத்தைக் கடந்து கொண்டுள்ளது'' ''இந்தியா இன்று மூன்று முக்கிய பிரச்சனைகளை எதிர் கொண்டுள்ளது. அவை : (1) பஞ்சமும் பொருளாதார பின் தங்கிய நிலைமையும். (2) முன்னேற்றத்தின் போது இயற்கையாக தோன்றும் கஷ்டங்கள் (3) இயற்கையின் சேதம் ஆகியவையே. இவ்விடர்பாடுகளையெல்லாம் நாடு எதிர்கொண்ட போதிலும், நாடு படிப்படியாக முன்னெறிக் கொண்டுள்ளது''

—என்று திருமதி இந்திரா காந்தி பேசியுள்ளார்.

## எந்த திசையில் முன்னேற்றம்?

''நாடு படிப்படியாக முன்னேறுவது'' என்னவோ உண்மைதான்! ஆனல், எந்த திசையில்? அதனல ஏற்பட்ட விளைவுகள் என்ன? அது தான் பிரச்சனை!

உண்மை என்னவெனில்— நாடு ஏற்கனவே கடுமையான அரசியல்— பொருளாதார நெருக்கடியில் ஆழமாகச் சிக்கி கொண்டுள்ளது!; ''நவீன—காலனி' அடிமைத்தனத்தை நோக்கி 'படிப்படியாக'' முன்னேறிக்கொண்டுள்ளது!!

மக்களுக்கான உணவு முதற் கொண்டு, நாட்டுப்பாதுகாப்பு ஈருக ஒவ்வொரு விஷயத்திற்கும்—முதலாளித்துவ நாடுகளை பிச்சைபாத்திரத்துடன் அணுகிக்கொண்டுள்ளது.

இவ்வுண்மையை மறைக்கத் தான் - ''நாடு முன்னேறிக் கொண்டுள்ளது'' என்று இந்திரா காந்தி வாய்ச் சவடால் அடிக்கின்றார்

இந்தியாவின் 'துன்பத்திற்கு' காரணமென்று அவர் குறிப்பிட்டிருக்கும் மூன்று காரணங்களும் - இன்றைய துன்பத்திற்கு உண்மையான காரணங்கள் அல்ல. அவை இந்திய நாட்டிற்கு மட்டும் உள்ள தனித்தன்மைகளும் அல்ல.

ஆனல்-உலகில் பல நாடுகள் இந்த 'கஷ்டங்களுக்கு' இடையிலும், பெரும் முன்னேற்றம் கண்டுள்ளன.

## காரணங்கள்!

23 ஆண்டு காலமாக காங்கிரசின் ஏகபோக ஆட்சி நடைபெறுவதும், அதனை மக்கள் சகித்துக் கொண்டிருப்பதும் தான் இக்கஷ்டங்களுக்கான அடிப்படையான உண்மைக் காரணமாகும்

அடுத்து- கடந்த ஐந்தாண்டுகளாக பிரதமா இந்திரா காந்தியும், அதற்கு முன்பு 17 ஆண்டு காலம் பிரதமா நேருவும் சோசலிசம் பற்றி அடித்த ஏமாற்றுத்தனமான வாயச்சவடால்தான இக் 'கஷ்டங்களுக்கான' இரண்டாவது காரணமாகும். ஏனெனில், சோசலசம் பற்றியும், ஜனநாயகம் பற்றியும வாய்ச்சவடால் அடித்துக்கொண்டே- பெரு முதலாளிகளுக்கும் பெரு நிலப்பிரபுகளுக்கும் சேவை செய்வதில் ஈடுபட்டிருந்தனர். கொடூரமான வர்க்கச்சுரண்டலை மூடிமறைத்திருந்தனர்.

இதில் முதல் காரணத்தை ஏற்றுக்கொள்ளும் வாசகர்களுககு, இரண்டாவது காரணம் பறறி சந்தேகம் எழக்கூடும். அத்தகைய சந்தேகததை திருமதி இந்திரா காந்தியே தீர்த்துள்ளார்! அவர் கேரள வாக்காளர்களிடையே கூறியுள்ளதைப் படியுங்கள் :—

''காங்கிரஸ் அமைப்பில் ஏற்பட்ட பிளவுபற்றி குறிப்பிடும்போது—அது சிலர் குறிப்பிடுவதுபோல—பெங்களூர் மாநாட்டிற்குப் பிறகு கருதது வேறுபாடு தோன்றவலலை என்று இந்திரா காந்தி கூறினர். சுதந்திரம் கிடைத்தது முதற்கொணடு இவ்வேறுபாடு உள்ளது. அபபோதே கட்சியில் இரண்டுவகைக கருத்துக்கள் நிலவின. ஒன்று: தன்னுடைய தந்தை வகுத்த சோஷலிசப் பாதை! மற்றது: சோஷலிசத்தில் நம்பிக்கையற்றவர்களின் பாதை'' என்று இந்திரா குறிபபிட்டுள்ளார் (டைம்ஸ் ஆப் இந்தியா செப்டம்பர் 15, 1970—அழுத்தம் கொடுத்தது நாம்) அதாவது 'ஒருபுறம காங்கிரஸ்' பிராண்ட் சோஷலிசம் பேசுவோரும், மறுபுறம் பூர்ஷ்வா—நிலப்பிரபுத்துவ வர்க்கங்களின் அப்பட்டமான பிரதிநிதிகளும் அங்கே இருந்தனர்; அது இன்றும் தொடருகிறது

## பக்தவச்சலமும் மன்ருடியாரும்

இன்றைய சிண்டிகேட் காங்கிரஸ்காரர்களுடனும், அவர்களுடைய முன்னேடிகளுடனும் சேர்ந்துதான நேருதன் வாழ்நாள் முழுவதும் 'சோஷலிசததை'' அமுல் படுத்தினர்!! இப்போது, இந்திரா காநதியோ அதனை சுகாதியாக்களையும், சவானகளையும், நாயககுகளையும் பிரமமானந்த ரெட்டிகளையும், பக்தவசசலங்களையும், மன்ருடியார்களையும், இவர்களைப்போனற உடைமை வர்க்கப் பாதுகாவலர்களையும சேர்த்துக்கொணடு. சோஷலிசததை அமுல்படுத்தி வருகிருர்!! அதனை வேறு விதத்திலும் கூறலாம் :

''என் தந்தைக்கு பிற்போக்காளர் ஆதரவு அளித்து வந்த வரை எல்லாம் சரி! காங்கிரஸ் ஒன்றுபட்டிருந்தது! அதுபோல, இந்திரா காந்தியை பிரதமர் பதவியிலிருந்து அகற்றுவது என்ற 'ஒரு அம்சத் திட்டத்தை' சிண்டிகேட் தலைவர்கள் கைவிட்டு விட்டால், பிறகு எல்லாம் சரியாகிவிடும்! பின்னர் கடந்த 22 ஆண்டுகள் நடந்ததைப்போலவே, மதச் சார்பின்மை, சோஷலிசம், ஜனநாயகம் ஆகியவற்றிற்காக காங்கிரஸ் ஒன்று பட்டு வீரநடைபோடும்!! எனவே என் கைகளைப் பலப்படுத்துங்கள்! ஒன்று பட்ட காங்கிரஸ் விடுத்த ''முற்போக்குக் கொள்கைகளை,''— எந்தக் கொள்கைகளில் இருந்து எனது காங்கிரஸ் ''ஒரு மில்லி மீட்டர் அளவுகூட வழுவிச் செல்ல வில்லையோ'' அந்தக் கொள்கைகளை நான் அமுல் படுத்த உதவுங்கள்! ''சட்டம் ஒழுங்கு'' தேவைப் பட்ட போதெல்லாம்—ஆயிரக் கணக்கான கம்யூனிஸ்டுகளைச் சுட்டு வீழ்த்த என் தந்தையின் காலத்திலும் தயக்கம் இருந்ததில்லை! எனது பதவியின் கீழும், மத்திய ரிசர்வ் போலீஸ் படையை அனுப்பி, போராடும் தொழிலாளர்களை, விவசாயிகளை சுட்டு வீழ்த்துவதை எதுவும் தடுக்கவில்லை! நாம் நேர்மையுடன் செய்வதெல்லாம், நிலப்பிரபுக்களுக்கும், முதலாளிகளுக்கும் — சோசலிசம ஜனநாயகம, மதச் சார்பின்மை என்ற போலித் தனமான பாதுகாப்பினை அளிப்பதுதான்.'' — இந்திரா காந்தி ''சோசலிசத்தை'' அமுல் படுத்துவது இப்படித்

(8ஆம் பக்கம் பார்கக)

---

**மக்கள் சீனத்திற்கும்**

**ஜெர்மன் ஜனநாயக குடியரசுக்கும்**

**வாழ்த்துக்கள்!**

அக்டோபர் 1—ம் நாள் மாபெரும் சீனப் புரட்சியின் 21—வது ஆண்டுவிழா தினமாகும்! அதனைக் கொண்டாடும் சீன மக்களுக்கு நமது மனங்கனிந்த வாழத்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

அக்டோபர் 7—ம் நாள் ஜெர்மன் ஜனநாயகக் குடியரசின 26 வது ஆண்டுவிழா தினமாகும்! இம்மகத்தானநாளில் ஜெர்மன் மக்களுககு எங்கள் நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.



# கேரளத்தில் பல்லக்குத்

## அமைச்சரின் வினயமும், வலதுகளின் 'ஸ்டண்டும்'!

வலது கம்யூனிஸ்டுகள் அடையாள பூர்வமான நிலப் போராட்டம் நடத்தினர். அதன் விளைவாக ஆயிரக் கணக்கானவர்களை, தி. மு. க. அரசு காராக்கிருகத்தில் அடைத்தது.

தி. மு. க. ஆட்சியின் அடக்குமுறைக் கொடுமையின் சாட்சி இது!

வலது கம்யூனிஸ்ட் விவசாயத் தொழிலாளர் சங்கத் தலைவரும், சட்ட மன்ற உறுப்பினருமான ஏ. கே. சுப்பையா திருச்சி சிறையில் வைக்கப்பட்டிருந்தார்.

அவரை வந்து சந்தித்த அமைச்சர் மாதவனிடம் மன்னிப்புக் கடிதம் எழுதிக் கொடுத்தார்.

அவ்விதம் மன்னிப்புக் கடிதம் எழுதிக் கொடுத்தது ஏன் என்ற காரணத்தை, திரு. பாலதண்டாயுதம் விளக்கி அருளியுள்ளார். அது பற்றி அவர் கூறுவதாவது:

''சிறையில்சட்டமன்ற உறுப்பினர்தோழர் ஏ. கே. சுப்பையாவை அமைச்சர் மாதவன் சந்திக்கிறார். விடுதலைக்குத்தனியாக நீங்கள் ஏன் எழுதக் கூடாது என்றுதூண்டுகிறார்! எழுதிய கடிதத்தில் 'இனி போராட்டம் நடத்தப்படமாட்டாது என்றுசேர்க்கும்படி **வெகுவினயமாக** வேண்டுகிறார். அதைதோழர் ஏ. கே சுப்பையா அவர்கள் **அமைச்சர்களின் நேர்மையில்நம்பிக்கை வைத்து** எழுதிவிடுகிறார்'' —என்று ஜனசக்தி ஏட்டில் (27-9-70) திரு. பாலதண்டாயுதம் குறிப்பிட்டுள்ளார்.

அமைச்சர் மாதவன் வெகு வினயமாகப் பேசினாராம்!! அந்த வினயப்பேச்சிற்கு சுப்பையா விட்டிலானாராம்!

நல்ல காலம்!! திரு. மாதவன் தன் வினயப் பேச்சினை அத்தோடு முடித்துச் கொண்டார்.

''கட்சியை விட்டே விலகி விடுகிறேன்'' என்று எழுதும்படி அமைச்சர் வினயமாக வேண்டியிருந்தால், திரு சுப்பையா எழுதித் தொலைந்திருந்தாலும் தொலைத்திருப்பார்! அந்த வரை மகிழ்ச்சியே!

மற்றொரு விஷயத்தையும் திரு பாலதண்டாயுதம் கூறியுள்ளார். அது என்ன?

''அமைச்சர்களின் நேர்மையில் நம்பிக்கை வைத்து'' எழுதிக் கொடுத்தாராம்! அது என்ன நேர்மை?

மன்னிப்புக் கடிதம் எழுதிக் கொடுத்ததை வெளியிடக் கூடாது என்ற நேர்மையா?

அல்லது

அமைச்சர் சொல்லிய வண்ணமே எழுதிக் கொடுத்த பிறகும், அம்பலப்படுத்தியிருக்கக் கூடாது என்ற நேர்மையா?

அமைச்சர்கள் பால் வலது கம்யூனிஸ்டுகள் எத்தகைய 'நேர்மையை' எதிர்பார்த்தனர்?

**எழுதிக் கொடுத்தது 'நேர்மையின்' அடிப்படையில் என்றால்—பகிரங்க கண்டனம் என்பது கண் துடைப்பு தானே!**

விஷயம் அம்பலமான பிறகு, மேற்கொள்ளப் பட்ட மேற் பூச்சு தானே!

அமைச்சரின் ''நேர்மையில்'' நம்பிக்கை வைத்து அவர் 'வினயப்' பேச்சிற்கு திரு சுப்பையா பலியான திருச்சி சிறைக்கோட்டம், விஷம் கொடுத்து கொல்லப் பட்ட வீரத்தியாகி களப்பால் குப்புவைக் கண்ட சிறைக் கோட்டம்!

விஷம் கண்டே கலங்காத வீரத்தியாகியைக் கண்ட சிறைக் கோட்டம்— வினயப்' பேச்சினில் மயங்குவோரையும் பார்க்கிறது. வேடிக்கை தான்!!

ஆனால் இது தனி மனிதரின் தவறல்ல! அந்தக் கட்சியின் தவறான கொள்கையின் பிரதிபலிப்பு!




கேரளத்தில் செப். 17-ம் தேதி நடைபெற்ற தேர்தலில் இந்திரா காந்தி காங்கிரஸ்— வலது கம்யூனிஸ்ட் கூட்டணி பெற்ற ''மகத்தான வெற்றி''க்கு முடி சூட்டியதுபோல் அக்டோபர் 4-ம் தேதி கைக் கூலி அச்சுதமேனன் அமைச்சரவை பதவியேற்பு அமைந்துள்ளது! கேரளத்தில் முதலாளி வர்க்க-நிலப்பிரபுத்துவ காங்கிரஸ் கட்சியின் மடியின் மீதுள்ள நாயைப்போன்ற இரண்டாவது அமைச்சரவை இது! முதன் முதலாக காங்கிரசின் மடியிலுள்ள நாயாக இருக்கும் அமைச்சரவையை அமைக்கும்போது 1954—55-ல் பிரஜா சோஷலிஸ்ட் கட்சிக்கும் அதன் கேரளத் தலைவரான பட்டம் தாணுப்பிள்ளைக்கும் இந்தப் பேறு கிட்டியது என்றால் இரண்டாவது முறையாக இந்தப் பேறு 1969—70-ல் வலது கம்யூனிஸ்ட் கட்சிக்கும் அதன் கேரளத் தலைவர் அச்சுத மேனனுக்கும் கிட்டியுள்ளது. பதினாறு ஆண்டுகளுக்கு முன், முதலாளித்துவ—நிலப் பிரபுத்துவ வர்க்கங்களுக்கு நம்பகமான இரண்டாவது பாதுகாப்பு அணியாக நிற்கும் உண்மையான வர்க்க சொரூபத்தை பி. எஸ். பி. காட்ட முடிந்தது என்றால்— டாங்கே கும்பலுக்கு ''காங்கிரஸ் கம்யூனிசம்'' என்ற திருட்டுக் குழந்தையைப் பெற்றெடுப்பதற்கு பதினாண்டுகளுக்கு மேல் பிரசவவேதனையை அனுபவிக்கவேண்டியிருந்தது. ஆளும் காங்கிரஸ் கட்சி இளமைத் துடிப்புடனும் ஏற்றத்துடனும் இருந்தபோது — ஐந்தாண்டுத் திட்டங்கள், சோஷலிசபாணி சமூகத்தை அமைக்கும்திட்டங்களைக் காட்டிக் கொண்டிருந்த சமயத்தில் 1954-55-ல் அதனுடன் கடிமணத்துக்கு பி. எஸ். பி விரும்பியதென்றால்— பொருளாதார அரசியல் நெருக்கடி ஆழமாகி வரும் சமயத்தில் கிழடு தட்டி தளர்ந்து போய் அழிந்துவரும் சமயத்தில் காங்கிரசை வலது கம்யூனிஸ்ட் கட்சி இப்பொது மயக்கிக் கொண்டிருக்கிறது. ஆளும் காங்கிரஸ் கட்சி அதனுடைய இடைவிடாத 24 ஆண்டு கால ஏகபோக ஆட்சியில் பின் தங்கிய நிலைமையிலிருந்தும் துன்ப துயரத்திலிருந்தும் நாட்டை விடுவிக்கச் சக்தியற்றிருந்திருக்கும் போது அச்சுத மேனன் அமைச்சரவை என்ற நாய் இந்த வித்தையைத் தன்னால் ''வலுவாகவும் ஒழுங்கான முறையிலும்'' செய்து காட்ட முடியும் என்று தன் எஜமானனிடம் குரைத்துக் கொண்டிருக்கிறது.

### கண் கொள்ளா காட்சி!

133 உறுப்பினர் அடங்கிய கேரள சட்ட மன்றத்தில் 37 உறுப்பினர் கொண்ட குட்டி முன்னணி அமைச்சரவையை அமைத்து இயங்கப் போகிற தாம் அதைப் பின்னால் இருந்து கொண்டுகேரள சட்ட மன்றத்தில் 32 உறுப்பினர்களைக் கொண்ட காங்கிரஸ் கட்சியும் டில்லி தர்பாரும் ஆட்டுவிக்கப் போகின்றனர். கேரளத்தில்

### ''பீப்பிள்ஸ் டெமாகிரசி'' தலையங்கம்

நடைபெற்ற இடைத் தேர்தலின் இந்திரா காங்கிரசும் அதன் குட்டி முன்னணி கூட்டாளிகளும் சாதித்துள்ள விநோதமான சாதனை இதுவே! இதைத் தான் 1972-ல் நடைபெறப் போகும் ஐந்தாவது பொதுத் தேர்தலுச்கு முன் மாதிரியாக அமைந்துள்ள சாதனை என்று முதலாளித்துவப் பத்திரிகைகள் எல்லாம் பிரச்சாரம் செய்கின்றன.

இந்த ''மகத்தான'' கேரள வெற்றியை இந்தியாவிலும் வெளி நாடுகளிலுமுள்ள விநோதமான கூட்டாளிகள் பொதுவான முறையில் கொண்டாடுவதுதான் காணற்கரிய காட்சியாகும்! இந்த வெற்றியை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிக்கும், காங்கிரஸ் கட்சியை அதிகாரத்திலிருந்து அகற்றும் அதன் அரசியல் நிலைக்கும் கிடைத்த பெரிய அடி என்று சர்வதேச ஏகாதிபத்தியவாதிகள் குதூகலிக்கின்றனர் இந்தியாவில் தேசிய ஜனநாயக, முதலாளித்துவமற்ற வளர்ச்சிப்பாதை என்று கூறப்படும் நிலைக்குக் கிடைத்த வெற்றி என்று இதை சர்வதேச திருத்தல்வாதத் தலைவர்கள் பாராட்டுகின்றனர். எந்த விதி விலக்குமின்றி நம் நாட்டிலுள்ள ஏகபோகவாதிகளின் கட்டுப்பாட்டிலுள்ள பத்திரிகைகள் எல்லாம் இதை ஆளும் காங்கிரஸ் கட்சி, அரசாங்கத்தின் தலைமையின் கீழ் ஜனநாயக, சோஷலிச சக்திகளுக்கும் சீரான முன்னேற்றத்துக்கும் கிடைத்த மாபெரும் வெற்றியாகும் என்று சித்தரித்துள்ளன. வலது கம்யூனிஸ்டுகளும் குட்டி முன்னணியிலுள்ள அவர்களுடைய குட்டி பூர்ஷுவா கூட்டாளிகளும் இதனை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிக்கும் அதன் ''அதிதீவிர'' நிலைக்கும் எதிராகக் கிடைத்துள்ள வரலாற்றுப் பிரசித்திப்பெற்ற வெற்றி என்று போற்றிப் புகழ்ந்துள்ளனர். மேற்குறிப்பிட்ட இந்த தேசிய, சர்வதேச சக்திகளுக்கெல்லாம் கேரள முன் மாதிரிதான் 1972 பொதுத் தேர்தலுக்கான நம்பிக்கையாக வந்துள்ளது. அவர்களுக்கெல்லாம் வலது கம்யூனிஸ்ட் கட்சிதான் ''ஆக்கரீதியான, வளர்ச்சியுடைய கம்யூனிசத்துக்கு'' மாதிரியாக அமைந்துள்ளது. அக்கட்சியின் தலைவரான அச்சுதமேனன் தற்போது இன்றியமையாத தலைவராக அமைந்துள்ளார். அவரே மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியையும் அதன் தலைவர் இ. எம். எஸ். நம்பூதிரிபாட்டையும் ஒழுங்குக்குக் கொண்டுவந்து, சட்டம் ஒழுங்கை நிலை நாட்ட வல்லவர் என்று அவர்கள் கருதுகின்றனர். இதுவே தற்போதைய விசித்திரமான நிகழ்ச்சிப் போக்கு! மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிக்கும், அதன் கூட்டாளிகளுக்கும் சில இடங்களில் தோல்விகள் ஏற்பட்டு முதலாளித்துவ— நிலப்பிரபுத்துவ காங்கிரஸ் கட்சிக்கும் அதன் அரசாங்கத்துக்கும் சில இடங்களில் வெற்றி கிட்டியதின் மீது சர்வதேச திருத்தல்வாதிகளுக்கு ஏற்பட்டுள்ள பிரதிபலிப்புகள் இவையே. இவற்றை விமர்சிக்

# தூக்கிகளின் 'வெற்றி' பவனி! ★

கூத் தேவையில்லை. இன்றுள்ள எதிர்ப்பட்டுள்ள சர்வதேசத் திருத்தல்வாத அபாயத்தை இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) அறிந்தேயுள்ளது.

### சர்வதேச திருத்தல் வாதிகளின் நிலை என்ன ?

இந்த நிலையில் வியப்பூட்டுவது— இந்தச் சர்வதேச நவீனத் திருத்தல்வாதிகள், ஆரம்பத்தில் இந்தியக் கம்யூனிஸ்ட்கட்சி (மார்க்சிஸ்ட்)யை பிளவுவாதிகள், சீர்குலைவாளர்கள் என்று வர்ணித்து விஷம் கக்கியதும் பின்னர் ராகத்தை மாற்றிக்கொண்டு இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)யை "போட்டி கம்யூனிஸ்ட் கட்சி" என்று வர்ணிக்கத் தொடங்கியதும் ஆகும். இவ்விதமாக வலதுசாரி கம்யூனிஸ்ட் கட்சியுடன் தங்களுடைய உறவு "சகோதர, கட்சிக்குகட்சி பந்தம்" அடிப்படையில் அமைந்திருந்ததாலும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியுடன் தங்களுடைய உறவு விரோதமானதல்ல என்று கூறினர். கம்யூனிஸ்ட் ஒற்றுமை, என்ற வலது கம்யூனிஸ்ட் கட்சிக்கும், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிக்கும் இடையே ஒற்றுமை என்ற பித்தலாட்டமான கோஷத்தையும் அவர்கள் எப்போதும் வற்புறுத்தி வந்தனர். அதே சமயம் நடைமுறையில் திருத்தல்வாதிகளுக்கும் அவர்களுடைய துரோகத்தனமான வர்க்கச் சமரச அரசியலுக்கும் தீவிர ஊக்கமளித்து வந்தனர். கேரளத் தேர்தலும், ஆளும் காங்கிரஸ் கட்சிக்கும் வலது கம்யூனிஸ்ட் முன்னணிக்கும் இடையே உருவாக்கப்பட்ட கூட்டணியும் சர்வதேசத் திருத்தல்வாதிகளின் சதியை— இந்தியாவில் கம்யூனிஸ்ட் ஒற்றுமைபற்றிய அவர்களுடைய பித்தலாட்டமான கோஷத்தை முற்றாக அம்பலப் படுத்திவிட்டது

"டாங்கே கோஷ்டி முழுக்க முழுக்க திருத்தல்வாத வர்க்கச் சமரச கும்பலாகிவிட்டது. அது தன்னை கம்யூனிஸ்ட் கட்சி என்று அழைத்துக் கொள்வதற்கு எந்த உரிமையும் இல்லை" என்று நம்முடைய கட்சியின் ஏழாவது மாநாடு 1964 நவம்பரிலேயே பிரகடனப்படுத்தியுள்ளது. இந்தப் பிரகடனத்தை கம்யூனிஸ்டுகளின் சில பொது நண்பர்களும், வலது கம்யூனிஸ்ட் கட்சியின் அணிகளும் டாங்கே கோஷ்டிக்கு எதிரான கடுமையான அவசர முடிவு என்று கருதினர். அதற்குப்பின் வலது கம்யூனிஸ்ட் தலைவர்கள் தங்களுடைய கட்சி காங்கிரஸ் அரசாங்கத்துடன் கூட்டுச் சேருவது பற்றி சிந்தித்ததே கிடையாது என்றும், தாங்கள் எப்போதும் முதலாளி வர்க்க—நிலப்பிரபுத்துவ ஆட்சிக்கு எதிராகப் போராடியே வருவதாகவும் சத்தியம் செய்துவந்தனர். தங்களை திருத்தல்வாதிகள் என்றும், வர்க்க சமரசவாதிகள் என்றும், காங்கிரஸ் ஏஜெண்டுகள் என்றும், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்கட்சி அவதூறு செய்து வருவதாகவும் கூக்குரலிட்டு வந்தனர். கேரள இடைத் தேர்தலும், ஆளும் காங்கிரஸ் அரசாங்கத்துக்கும் வலது கம்யூனிஸ்ட் கட்சிக்கும் இடையே உருவாக்கப்பட்ட கூட்டணியும், இந்த வெட்கக்கேட்டை மூடி மறைக்கும் கடைசி திரையையும் அகற்றி விட்டது. காங்கிரஸ் அரசாங்கத்தின், சுரண்டல் கூட்டத்தின், வர்க்க ஆட்சியின் பல்லக்குத் தூக்கிகளே வலது கம்யூனிஸ்டுகள் என்பதும் அம்பலமாகி விட்டது. இவ்விதமாக அவர்களுடைய மோசமான வர்க்கச் சமரச அரசியல் நிலையும் துரோகமும் ஊர்ஜிதப்படுத்தப் பட்டுள்ளது மன்றி வலது கம்யூனிஸ்ட் கட்சியை கம்யூனிச சித்தாந்தத்துக்குப் புறம்பான ஓடுகாலிகள் என்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி அறிவித்ததும் முற்றும் சரி என்றும் உறுதிப்படுத்தியுள்ளது. முறித்துக் கொண்டு செல்லுமளவுக்கு இந்த ஓடுகாலி வலதுசாரி சந்தர்ப்பவாதக் கோஷ்டியுடன், கொள்கை ரீதியான தத்துவார்த்த அரசியல் போராட்டத்தை நாம் நடத்தாதிருந்தால் 1967-ல் கிட்டிய காங்கிரஸ் எதிர்ப்பு ஜனநாயக வெற்றிகள் கிடைத்திருக்கவே முடியாது. அரசியல் விவகாரங்களை நுட்பமாகவும், விமர்சன ரீதியாகவும் பார்க்கும் யாரும் 1967—பொதுத் தேர்தலில் வலது கம்யூனிஸ்டுகளின் சீர்குலைவுப் பாத்திரம்தான் மக்களுக்கு மேலும் பெரு வெற்றிகள் கிடைக்க முடியாமல் தடுத்தது என்றும், மேலும் பெரிய அடிகள் விழாதபடி காங்கிரஸ் தப்பித்ததற்கு உதவியது என்றும் எளிதில் பார்க்க முடியும். 1967—69 வருடங்களில் மேற்கு வங்க, கேரள காங்கிரஸ் எதிர்ப்பு ஐக்கிய முன்னணிகளில் இடம் பெற்றபோதுகூட, வலது கம்யூனிஸ்ட் கட்சி காங்கிரஸ் கட்சியின் ஐந்தாம் படையாகவே செயல்பட்டுவந்தது என்பது தெளிவாகியுள்ளது. இவ்விதமான துரோகப் பாத்திரத்தையே வலது கம்யூனிஸ்டுகள் இந்திய கம்யூனிஸ்ட் இயக்கத்தில் வகித்துள்ளனர்.

### அனுபவ உண்மை

இந்திய கம்யூனிஸ்ட் இயக்கத்தை ஒன்றிணைக்கும் நடவடிக்கையாக மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிக்கும் வலது கம்யூனிஸ்ட் கட்சிக்கும் இடையே ஒற்றுமை ஏற்பட வேண்டும் என்ற கோஷத்தை

(8ஆம் பக்கம் பார்க்க)

---

**வேலியே பயிரை மேய்ந்த வரலாறு! ★ காஜி விசாரணை அறிக்கை!**

# "போலீசார் குடிபோதையிலிருந்தனர்; கொள்ளையும் அடித்தனர்!"

## சாட்சிகளின் வாக்குமூலம்!

நெய்வேலியில் தமிழக அரசின் போலீஸ் கட்டவிழ்த்து விட்ட அடக்குமுறை பற்றி — போலீஸ் இலாகாவைச் சார்ந்த திரு. காஜி விசாரணை நடத்தினர்.

அந்த விசாரணையின் போது — சாட்சிகள் கூறிய சாட்சியங்களை இங்கே அப்படியே பிரசுரிக்கிறோம் :-

ராமதாஸ், கோவிந்தராஜின் மகன், சாட்சி 23— 1970 மே, 2-ம் நாள் இரவு 8 மணிக்கு இவர் தொழிலாளர் முன்னேற்ற சங்க அலுவலகத்தில் இருந்ததாகக் குறிப்பிட்டார். அவருக்கு அருகில் 50 பேர் இருந்தனர். அவர்கள் வேலைநிறுத்த நிலைமை பற்றிப் பேசினர்.

இரவு 10–30 மணிக்கு துப்பாக்கிச் சூடு நடக்கும் ஓசை கேட்டது. இரவு 12–30 மணிக்கு சங்க அலுவலகத்திற்குக் காவல் துறை வண்டி வந்தது.

வண்டியிலிருந்து 25 காவலர்கள் கீழே இறங்கி சங்க அலுவலகத்திற்கு வந்தனர். இங்கு கூடியிருந்தவர்கள் ஓடிவிட்டனர்.

அவரும், அவரது நண்பர் தில்லையும் அலுவலகத்திற்குள் இருந்தனர். காவலர் சங்க அலுவலகக் கதவை திறந்தனர்.

சாட்சி (23) குழுக் கூட்ட அறைக்குள் சென்றார். இந்த அறைக் கதவையும் வலிந்து காவல் துறையினர் திறந்தனர்.

10 காவலர்கள் அவரையும் அவரது நண்பர் தில்லையையும் அடித்தனர்.

**காவலர்கள் குடிபோதையிலிருந்தனர். மதுவின் வாடை வீசிற்று.**

அவர் மருத்துவச்சீட்டை அளித்தார் (சா. ஆ. ஏ. 2) அவர் காய பட்ட அடையாளங்களைக் காட்டினார்.

கலவரத்தில் உடைந்த கைக் கடிகாரத்தையும் அவர் காட்டினார்.

**இரத்தக்கறை படிந்த காலுடையையும் காட்டினார். இரத்தக் கறை படிந்த சட்டையையும் அளித்தார் தற்போதைய முதலமைச்சரின் படத்தையும் காவலர்கள் உடைத்தனர்.**

—(தமிழக அரசு வெளியிட்டுள்ள காஜி விசாரணை அறிக்கை நூலில் 14-ஆம் பக்கத்தில் உள்ளது)

### "காவலர்கள் ரூபாய் திருடினர்"

கமலநாதன், அப்ரஹாம் மகன், சாட்சி-44 :-

1970 மே, 3-ஆம் நாள், காலை 11 மணி அளவில், செல்வராஜ் மன்றம் அருகில் சைக்கிளில் போய்க்கொண்டிருந்ததாகக் கூறினார்.

காவல் துறை வண்டி வருவதைப் பார்த்தார். 4 அல்லது 5 காவலர்கள் வண்டியிலிருந்து இறங்கி, தலை, கைகள், கால்களில் அடித்தனர்.

சைக்கிளில் இருந்து விழுந்து சுய நினைவை இழந்தார். அவரது நண்பர் செந்தட்டி அவரை மருத்துவமனைக்கு எடுத்துச் சென்றார். சாட்சி மருத்துவச் சீட்டை அளித்தார்.

**அவர் வைத்திருந்த ரூ. 50 காவல் துறையினரால் களவாடப்பட்டது.**

—(தமிழக அரசு வெளியிட்டுள்ள காஜி விசாரணை அறிகைை நூலில் 15-ஆம் பக்கத்தில் உள்ளது)

### போலீசார் சிகரெட், பிஸ்கெட், பணம் திருடினர்

ஏ. சிவசங்கரன், அர்சுன முதலியாரின் மகன், சாட்சி 52 :—

1970 மே, 4-ஆம் நாள் காலை 9 மணிக்குக் காவல் துறை லாரி ஒன்று வந்ததாகக் கூறினார். இதைப் பார்த்ததும் மக்கள் ஓடத் தொடங்கினர். இவரும் ஓடி, புதர் அருகே மறைந்துகொண்டார்.

காவல் துறையினர் இவரது கடைக்கு வந்து, அவரது மகன் சம்பத்தைப் பிடித்திழுத்துக் கீழே தள்ளினர்.

அவர்கள் இவரது கடையை உடைத்து சாக்லேட் டின்களை சேதப்படுத்தினர்.

**அவர்கள் (போலீஸ்) 9 சிகரெட் கட்டுகளை எடுத்துச் சென்றனர் பிரிட்டானியா பிஸ்கட் டின் ஒன்றையும், கிருஷ்ணா மிட்டாய்க் கட்டு ஒன்றையும் எடுத்துச் சென்றனர்.**

புதரிலிருந்து சாட்சி இதைக் கவனித்துக் கொண்டிருந்தார். இதைக் காவல் துறைக்கு அவர் புகார் செய்யவில்லை. ரூ. 100 அவரது கடையில் காணவில்லை.

—(தமிழக அரசு வெளியிட்டுள்ள காஜி விசாரணை அறிக்கையில் 13-ஆம் பக்கத்தில் உள்ளது

# கேரளத்தில் பல்லக்கு தூக்கி...

(7ஆம் பக்க தொடர்ச்சி)

உணர்ந்தோ உணராமலோ எழுதுபவர்களுக்கும் கேரளத் தோல்விகளுக்குக் காரணம் கம்யூனிஸ்டுகளிடையே ஒற்றுமையின்மையின் விளைவு என்று கூறி, தெரிந்தோ தெரியாமலோ மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிக்கும் வலது கம்யூனிஸ்ட் கட்சிக்கும் இடையே ஒற்றுமை பற்றிய பழைய பல்லவிக்குத் திரும்புவர்களுக்கும் ஏங்கல்ஸ் கூறியுள்ள சில முக்கியமான கருத்துக்களை நினைவுபடுத்த விரும்புகிறோம்: அப்போதைய பிரெஞ்சுத் தொழிலாளர் கட்சியில் வலதுசாரி திருத்தல் வாத பிரிவினர் உண்டுபண்ணிய துரோகத்தனமான பிளவைக் குறிப்பிட்டு ஏ. பிபெலுக்கு 1882 அக்டோபர் 28-ம் தேதி ஏங்கெல்ஸ் எழுதிய கடிதத்தில் கீழ் வருமாறு குறிப்பிடுகிறார்:- ' இந்தப்பிரச்னை கொள்கை ரீதியான பிரச்னையாகும். இது போராட்டத்தை முதலாளி வர்க்கத்துக்கு எதிராக வர்க்கப் போராட்டமாக நடத்த வேண்டுமா அல்லது சந்தர்ப்பவாத முறையில் இயக்கத்தின் வர்க்கத் தன்மையையும் திட்டத்தையும் கைவிட்டு இம்முறையில் அதிக ஓட்டுக்களையும் ஆதரவாளர்களையும் பெறும் முறையில் நடத்த வேண்டுமா என்பதேயாகும். வர்க்கப்போராட்டமாக நடத்தாமலிருப்பதை தேர்ந்தெடுத்திருப்பதின் மூலம், மால்டனும், பிரவுசும் இயக்கத்தின் பாட்டாளி வர்க்கத் தன்மையைக் கைவிட்டு பிளவைத் தவிர்க்க முடியாததாக ஆக்கியுள்ளனர். முடிந்தால் ஒற்றுமை நல்லதுதான். ஆனால், ஒற்றுமைக்கும் மேலான சில விஷயங்களும் இருக்கின்றன.''

முதலாளித்துவ—நிலப்பிரபுத்துவ காங்கிரஸ் அரசுக்கு எதிரான பாட்டாளி வர்க்க எதிர்க்கட்சி என்ற முறையில், கம்யூனிஸ்ட் கட்சியின் தன்மையைக் காக்கும் கொள்கைக்கு விசுவாசமாக நின்றதால்தான் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி டாங்கே கட்சியிடமிருந்து பிரிந்துவர வேண்டியிருந்தது. வலதுசாரி, இடதுசாரி சர்வதேச திருத்தல்வாதத் தாக்குதல்கள் இருந்த போதிலும், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிக்கும் அதன் அரசியல் நிலைக்கும் உழைக்கும் மக்களின் ஆதரவு மென்மேலும் பெருகிவருவதற்குக் காரணம், டாங்கேகோஷ்டிக்கு எதிரான இந்தக் கொள்கை ரீதியான விட்டுக்கொடுக்காத போராட்டமேயாகும். பாட்டாளிவர்க்கப் போராட்டத்தை ஆதரித்து நின்றதேயாகும். இந்தச் சரியான அரசியல் நிலையும் அதற்கு மக்களிடையே கிட்டிய ஆதரவும்தான் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியை இன்று இருக்கக்கூடிய நிலையில் வைத்துள்ளது. மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி பெற்றிருக்கும் ஓட்டுக்களும் பிடித்திருக்கும் இடங்களும் கேரள, மேற்கு வங்க காங்கிரஸ் எதிர்ப்பு ஐ.மு. அரசுகளில் அது வகித்த முன்னணிப் பாத்திரமும் இந்தக்கொள்கை ரீதியான போராட்டத்தின் விளைவேயாகும். சில குட்டி பூர்ஷுவாக் கட்சிகளின் துரோகமும், வலது கம்யூனிஸ்டுகளின் துரோகமும் ஒரு சில இடங்களைப் பிடிப்பதற்காகச் செய்யப்பட்டுள்ள தேர்தல் யுக்திகளும் பதவி ஆசையும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியைப் பயமுறுத்த முடியாது. அதனுடைய உறுதியான சரியான— புரட்சிகர அரசியல் நிலையிலிருந்து பிறழச் செய்ய முடியாது. மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி வேட்பாளர்களும் அதன் கூட்டாளிகளும் பிடித்திருக்கும் இடங்களும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிக்கும் அதன் கூட்டாளிகளுக்கும் ஓட்டுக்களின் எண்ணிக்கை பெருவாரியாகப் பெருகியிருப்பதும், அதன் தத்துவார்க்க அரசியல் நிலை சரியானது என்பதை உறுதிப்படுத்தியுள்ளது. கேரள இடைத் தேர்தல்முடிவுகள் வெளிப்படுத்தும் உண்மைகள் இவையே.

## பொய்ப் பிரசாரம்

கேரளத்திலும், மேற்கு வங்கத்திலும் ஆளும் காங்கிரஸ் கட்சியுடனும் அரசாங்கத்துடனும் கூட்டுச் சேர்ந்து அவர்கள் எதிர்த்து போரிட்டது மிகவும் வலதுசாரி பிற்போக்கு சக்திகளை அல்ல என்பதையும், பிரதானமாக அவர்கள்எதிர்த்துப் போரிட்டது மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி கூட்டணி தலைமையிலமைந்த ஜனநாயக புரட்சிகர சக்திகளைத்தான் என்பதையும் வலது கம்யூனிஸ்ட் ஓடுகாலிகளும், அவர்களுடைய சர்வதேச திருந்தல் வாதப் போஷகர்களும் நன்கறிவார்கள். இந்த இரு மாநிலங்களிலும் வளர்ந்து வரும் காங்கிரஸ் எதிர்ப்பு ஜனநாயக இயக்கத்தின் தாக்குதலின் முன் பிரதானமான முதலாளித்துவ நிலப் பிரபுத்துவ பிற்போக்கு சக்திகள் இந்திரா காங்கிரசின் பின்னாலும் அதன் அரசாங்கத்தின் பின்னாலும் ஏற்கனவே அணிவகுத்து நிற்பதை அனைவரும் அறிவர். இந்திரா காந்தி அரசாங்கத்துடன் கூட்டுச் சேர்ந்து மிகவும் வலதுசாரி பிற்போக்கு சக்திகளையும், இடதுசாரி அதி தீவிர சக்திகள் என்று கூறப்படுவதையும் ஏக காலத்தில் எதிர்த்துப் போராடுவதாக திருத்தல் வாத ஓடுகாலிகள் பித்தலாட்டம் செய்வது யாரையும் ஏமாற்றமுடியாது. பிற்போக்கு சக்திகளும், எதிர் புரட்சி சக்திகளும் வகித்துள்ள மக்கள் விரோத பாததிரத்தை மூடி மறைக்கும் முயற்சியே இது.

வலது கம்யூனிஸ்ட் கட்சியின் சோஷியல் பாசிஸ்ட் கோஷங்களையும், பிரசாரத்தையும் ஆராய்ந்தால் அதன் பிற்போக்கு, எதிர் புரட்சித் தன்மை வெட்டவெளிச்சமாகும். மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி வன்முறையையும், கொலையையும் தூண்டி விடுவதாக அது அவதூறு செய்கிறது. சட்டமின்மைக்கும், ஒழுங்கீனத்துக்கும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிதான் பொறுப்பு என்று அது குற்றம் சாட்டுகிறது. சட்டத்தையும் ஒழுங்கையும் பாதுகாப்பது வலது கம்யூனிஸ்ட் கட்சியே என்றும் அது பறைசாற்றி கொள்ளுகிறது

''ஆட்சியையும் கிளர்ச்சியையும்'' மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி ஒன்றிணைப்பது அராஜகத்தையும் சட்டமின்மையும் தூண்டி விடுவதாகும் என்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி மீது அது அவதூறு பொழிகிறது மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி பெற்றுள்ள முன்னணிப் பாத்திரம் குறித்து அது பொறுமையுற்று ''அதிகாரம் செய்வதாகவும் ஆதிக்கம் புரிவதாகவும்'' மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் மீது குற்றம் சாட்டியது. வலது கம்யூனிஸ்ட் கட்சி வார ஏடான நியூ ஏஜுக்கு மேற்கு வங்கத்திலும் கேரளத்திலும் நிகழும் கொலைகளையும் குற்றங்களையும் தொகுத்து மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்தான் அவற்றைச் செய்தது என்று கூறுவதைத் தவிர, வேறுவேலை கிடையாது. நக்சலைட் வன்முறை என்று கூறப்படுவதற்கு எதிராக சக்தியை வீணாக்குவதைவிட, மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிக்கு எதிராகப் போலீஸ் இராணுவத் தாக்குதலைத் தீவிரப்படுத்தவேண்டும் என்று அரசாங்கத்தைத் தூண்டுவதைத் தவிர, அப்பத்திரிகைக்கு வேறு வேலை கிடையாது. ஏனெனில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியைத்தன் நசுக்க வேண்டுமாம். இது மஞ்சள் பத்திரிகைகளையே தலைகுனியச் செய்வதாகும். இரண்டாவது கம்யூனிஸ்ட் அகிலத்தின் சோஷியல ஜனநாயக வாதிகள் இவர்களைவிட எவ்வளவோ மேல்!

இதுவே வலது கம்யூனிஸ்ட் கட்சியின் சொரூபமாகும். 133 உறுப்பினர்கள் உள்ள சட்டமன்றத்தில் 16 உறுப்பினர்களைக் கொண்ட இந்தக் கட்சி, மற்ற கட்சிகளையும் குழுக்களையும் சேர்ந்த 21 உறுப்பினர்களைச் சேர்த்துக் கொண்டு, பின்னலிருந்து கொண்டு ஆட்டுவிக்கும் 32 ஆளும் காங்கிரஸ் கட்சி உறுப்பினர்கள் துணையுடன் அமைச்சரவை அமைத்திருப்பதுதான் இந்தியாவில் தேசிய ஜனநாயகத்துக்கும் முதலாளித்துவ மற்ற வளர்ச்சிப் பாதைக்கும் முன் மாதிரியாகத் திகழும் புரட்சிகர அரசாங்கம் என்று பறைசாற்றப் படுகிறது. இந்த ''மகத்தான புகழ் செறிந்த வெற்றி'' அவர்களுக்கு மீண்டும் மீண்டும் கிட்டட்டும்!

ஏனெனில், இவை ஒவ்வொன்றும் இந்தியாவில் வலதுசாரி சீர்திருத்தவாத திருத்தல்வாதச் சவப் பெட்டியின்மீது அடிக்கும் ஆணியேயாகும். அக்டோபர் 4-ம்தேதி தேதி இந்த அமைச்சரவை பதவி ஏற்பது வருந்தத் தக்கதாகும். இந்த ''காங்கிரஸ்—கம்யூனிச'' திருட்டுக் குழந்தைக்கு மிகவும்பொருத்தமான தினம் அக்டோபர் 2ம்தேதியேயாகும்! இந்திரா காந்தியின் மடியிலுள்ள நாயான இந்த அமைச்சரவைக்கு நம் வாழ்த்துக்கள் உரித்தாகுக! இந்தச் செல்லக் குழந்தை அழிவை நோக்கித் துரிதமாகப் போய்க் கொண்டிருப்பதை உணருவதற்கு வலது கம்யூனிஸ்ட் கட்சியின் சர்வதேச திருத்தல்வாதக் கூட்டாளிகளுக்குக் காலம் பிடிக்கலாம்.

# இந்திராவின் கூற்றும்.........

(5ஆம் பக்கத் தொடர்ச்சி)

தான்! இவ்வளவு வெளிப்படையாக நடந்து கொள்ளும் இந்திரா காந்திக்கு மக்கள் நன்றி சொல்லக் கடமைப் பட்டவர்களாவார்கள்!

## அரசியல் சட்டமும் மார்க்சிஸ்டுகளும்

''மார்க்சிஸ்டுகள் அரசியல் அமைப்புச் சட்டத்தை அழிக்கப் போவதாகக் கூறுகிறார்கள்! அதன் மூலம், மக்கள் உரிமைகளை அழித்து விடுவார்கள்''

—என்றும் இந்திரா காந்தி பேசியுள்ளார்.

அஸ்வத்தாமன் ''மரணம்'' பற்றி தருமபுத்திரன் சொன்ன பொய்யினை போன்றுள்ளது இந்த அறிக்கை.

நிலப்பிரபுக்களும், பெரு முதலாளிகளும கொள்ளையடிப்பதற்கு உத்திரவாதம் அளிக்கும் பூர்ஷுவா-நிலப்பிரபுத்துவ அரசியல் சட்டத்தை அழிக்கத்தான் மார்க்சிஸ்டுகள் விரும்புகிறார்கள்; அதே வேளையில, சுரண்டலுக்கும் ஒடுக்குமுறைக்கும் முற்றுப்புள்ளி வைக்கும்உரிமையை மறுக்கும் அரசியல் சட்டத்தை அழிக்கத்தான மார்க்சிஸ்டுகள்விரும்புகின்றனர். அதற்குப் பதலாக, மக்களின் ஜனநாயக உரிமைகளை உறுதி படுத்தக் கூடிய — சமூகத்தைக் கொள்ளையடிக்கும் ஒருசில பணக்காரர்களின் உரிமையைப் பறிக்கவல்ல — ஒரு அரசியல் சட்டம் தேவையெனறு மார்க்சிஸ்டுகள் கோருகின்றனர்.

நாம் கூறும் இக்கருத்தினை, இந்திரா காந்தி திரித்துக் கூறுகிறார்; அரை குறையாக உண்மைகளைக் கூறி தவறான வழி நடத்துகிறார்.

இதைப்போலவே, மார்க்சிஸ்டுகள், ''மக்களின் உரிமையை அழிக்க முயலுகின்றனர்'' என்று இந்திராகாந்தி கூறியிருப்பது தவறானதாகும். ஏனெனில், மார்க்சிஸ்டுகள் சுரண்டுவோரின் உரிமையைத்தான் ஒழிக்க விரும்புகின்றனர். அதன்மூலம் பொதுமக்களின் உரிமைகளைப் பாதுகாக்கவே விழைகின்றனர். சாதாரணமாக, ஒவ்வொருவருக்கும் தேவையான அடிப்படையை நேர்மை இல்லாமல், மார்க்சிஸ்டுகளின் நிலையைத் திரித்துக் கூறுவதில்தான் இந்திரா காந்தி ஈடுபட்டார்

அதுபோலவே - ''தனது கட்சி வன்முறையற்ற வழியை விரும்புகிறது! ஆனால் மார்க்சிஸ்டுகள் வன்முறையை விரும்புகின்றனர்'' என்று கூறியதும் ஏமாற்று வார்த்தைகளே! ஏனெனில மார்க்சியம் தோன்றிய நாளில் இருந்து இன்று வரை உடைமை வர்க்கத்தினர் சொல்லிச் சலித்த பழங்கதை அது!

மேற்கு வங்க மக்களின் ஜனநாயகக் கோரிக்கையை ஏற்று தேர்தல் நடத்த மறுக்கும் இந்திரா காந்தி மத்திய ரிசர்வ் போலீஸ் படையின் துணை கொண்டு பாட்டாளி மக்களை ஒடுக்க முனைந்திருக்கும் இந்திரா காந்தி — ''வன்முறை'' பற்றி பேசுகிறார்! (''இதே வன்முறை''க்கூப்பாட்டினை, தங்கள் எஜமானர்களின் ஆணைப்படி அச்சுதமேனனும் எதிரொலித்துள்ளார்).

முடிவாக — மேற்கு வங்க, கேரள ஐக்கிய முன்னணிகள் பற்றிய அவதூறுகளையும் இந்திரா காந்தி அள்ளிப் பொழிந்துள்ளார். அந்த அரசுகள் — வாக்குறுதியை நிறைவேற்றவில்லையென்றும் (!), உட்கட்சிப்பூசலில் ஈடுபட்டிருந்தன வென்றும் இந்திரா காந்தி குற்றம் சாட்டியுள்ளார்.

ஆனால் உண்மை என்னவென்றால்—மக்களுக்கு நன்மை பயக்கும் காரியங்களை ஐ.மு. அரசுகள் செய்த போதெல்லாம் அதற்கு குறுக்கே நின்றது இந்திரா காந்தியின் அரசாங்கம் தான்.

அவற்றைக் கவிழ்ப்பதற்கான முயற்சியில் தீவிரமாக ஈடுபட்டதும் இந்திரா காங்கிரஸ் அரசாங்கமே. இதனை மறைக்கத்தான் ஐ.மு. அரசுகளைபபற்றி அவர் குற்றம் சாட்டுகிறார்!

அதுமட்டுமின்றி, முதலாளிகள் நிலப்பிரபுக்கள் ஆகியோரின் பாதுகாப்பைத தன் கடமையாகக்கொண்டிருக்கும் இந்திராகாந்தியால்— கேரள, வங்க ஐ.மு. அரசுகளைப் பாராட்டமுடியாதுபோனதில் வியப்பேதுமில்லை.

ஆனால், போராடிப்போராடி வாழ்வில் நேரடி அனுபவம் அடைந்துவரும் மக்களின் முன்னே—இந்தப் பொய்யும் புனைசுருட்டும் பொடிபட்டுப் போகும்!

---

## தர்மபுரி மாவட்ட விவசாய சங்க மாநாடு

தர்மபுரி மாவட்ட விவசாயிகள் சங்க எட்டாவது மாநாடு, தர்மபுரி விவேகானந்த நகர மாளிகையில் அக்டோபர் 8-ம் தேதி அன்று நடைபெற இருக்கிறது.

# குறிப்புகள்

## சர்வாதிகாரச் செயலுக்கு முடிவுகட்ட...

உத்தரப் பிரதேசத்தில் ஜனாதிபதி ஆட்சியைத் திடீரென பிரகடனப்படுத்திய நிகழ்ச்சி, நாடு முழுவதுமுள்ள ஜனநாயக ஆர்வமுடையோரிடையே பெரும் அதிர்ச்சியை உண்டாக்கியுள்ளது.

கவர்னர் என்ற நியமன பதவியைத் தன் கையில் வைத்துக்கொண்டு, மத்திய அரசை ஆட்டிப்படைக்கும் இந்திரா காங்கிரஸ் எத்தகைய கேவலமான—ஜனநாயக விரோத—மக்கள் விரோதச் செயல்களில் ஈடுபட்டு வருகிறது என்பதை முன்பு கேரளத்திலும், மேற்கு வங்கத்திலும் கண்டோம்.

முன்பு,மேற்கு வங்கத்தில் சட்டசபை கூடவிருந்ததையும் அதில் தன் மெஜாரிட்டி பலத்தை அன்று மார்க்சிஸ்ட் தலைமையிலிருந்த ஐக்கிய முன்னணி நிரூபித்துக்காட்டத் தயாராக இருந்ததையும், அதை "நிராகரித்து விட்டு தர்மவீரா என்ற கவர்னரைப் பயன்படுத்தி, மத்திய அரசு ஐ. மு.மந்திரி சபையை" டிஸ்மிஸ் செய்ததையும் யாவரும் அறிவர்.

கேரளத்தில் ஐககிய முன்னணிக்கு துரோகம் இழைத்த வலதுசாரி அச்சுதமேனனின் மந்திரி சபைக்கு மெஜாரிட்டி பலம் இல்லாமல் கவிழ்ந்துபோக இருந்த சமயத்தில், கேரள கவர்னர் விசுவநாதன் அச்சுதமேனன் மந்திரி சபையின் பலாபலத்தைச் சட்ட சபையில் சோதிக்க அனுமதிக்காமலே, அதை கலைத்ததையும் நாடறியும்.

சட்டசபை தங்களுக்கு எதிராகப் போய்விடுமோ என்ற காரணத்தால் அதைக்கலைத்த அதே சமயத்தில், துரோகிகளின் மந்திரி சபையை "டிஸ்மிஸ்" பண்ணமல் பாதுகாத்தார் கவர்னர். காரணம் அச்சுதமேனன் மந்திரி சபை இந்திரா காந்தியின் எடுபிடி ஆளாக இருந்ததுதான்.

உத்திரப் பிரதேசத்தில் சரண்சிங் கட்சியான பாரதிய கிரந்தி தளத்துடன் சேர்ந்து கொண்டு, சரண்சிங்கை முதலமைச்சராக ஆக்கியது இந்திரா காங்கிரஸ்தான்.

சரண்சிங் கோஷ்டி, கடைந்தெடுத்தப் பிற்போக்குக் கோஷ்டி என்பதுதெரிந்ததே அதனுடன் இந்திராகாங்கிரஸ் கூட்டுசேர்ந்தது.ஆனல் இந்தக் கோஷ்டி தாங்கள்விரும்பியவாறெல்லாம் செய்ய வில்லை—அதாவது தன்னைக் கலைத்து விட்டு இந்திரா காங்கிரசுடன் இணைய வில்லை என்ற காரணத்தினல் சரண்சிங்கை கவிழ்க்க முடிவு செய்தது இந்திரா காங்கிரஸ்.

இந்த அரசியல் முடிவையே உத்திரப்பிரதேச கவர்னர் கோபால் ரெட்டியும் அமுல் நடத்தியுள்ளார்.

கேரளத்தில் சட்டசபையைக் கலைத்த பின் மந்திரி சபையை உயிரோடுவைத்துக் கொண்ட இந்திரா காங்கிரஸ் உத்திரப்பிரதேசத்தில் மந்திரி சபையை கலைத்து விட்டு சட்ட சபையை வைத்துக்கொள்ளும் வகையில் ஜனதிபதி ஆட்சியைக் கொண்டு வந்துள்ளது.

காரணம், மீண்டும் எம். எல். ஏ.க்களை விலைக்கு வாங்கி, சட்ட சபையில் தங்களுக்கு போதிய மெஜாரிட்டி இருக்கிறது என்பதைக் காட்டிக்கொள்ளவே.

இவ்வாறு, கவர்னர் பதவி என்பதும், கவர்னருக்கு அளிக்கப்பட்டுள்ள விசேச அதிகாரம் என்பதும் ஆளும் இந்திரா காங்கிரசின் சுய நலனுக்காகப் பயன்படும் அதிகாரமாக— சர்வாதிகாரமாக- மாற்றப்பட்டுள்ள கருவியாகும்.

1959-ம் ஆண்டில் கேரளத்தில் காங்கிரசு ஆட்சிக்கு விரோதமாக ஒரு கம்யூனிஸ்டு ஆட்சி இருந்த போது, அதற்கு எதிராக கவர்னர் அதிகாரம் துஷ் பிரயோகம் செய்யப்பட்டதிலிருந்து இன்று வரை கவர்னர் அதிகாரம் என்பது ஆளும் காங்கிரஸ் எதிர்க்கட்சிகளைத் தாக்கும் ஆயுதமாகவே பயன்படுத்தப்பட்டு வருகிறது.

இந்த அபாயத்தை மார்க்சிஸ்டுகளாகிய நாங்கள் ஆரம்பத்திலிருந்தே எதிர்த்துப்போராடி வந்துள்ளோம்— இதை முறியடிக்க வேண்டுமென்று வற்புறுத்தி வந்துள்ளோம்.

அன்று நமது வற்புறுத்தலை ஏற்காத கட்சிகளும், நபர்களும் இன்று இந்த அபாயத்தை உணர தலைப்பட்டிருப்பது வரவேற்கத்தக்கதே!

கவர்னரின் விசேஷ அதிகாரங்களை ஒழித்துக் கட்டி தேர்ந்தெடுக்கப்பட்ட சட்ட சபையின் பூரண அதிகாரத்தை நிலைநாட்ட எடுக்கப்படும் சகல முயற்சிகளையும் நாம் வரவேற்போம்.

இதை எந்தத் தரப்பிலிருந்து- எந்த உள்நோக்கத்துடன் யார் செய்ய முன் வந்தாலும் இந்த நோக்கத்தை- அதாவது கவர்னர் சட்டசபையையும் மந்திரி சபையையும் தன் இஷ்டம் போல் கலைத்து விடும் அதிகாரத்தை ரத்து செய்யும் நடவடிக்கையை வரவேற்போம்.

வங்கத்தில் மார்க்சிஸ்டுகள் தலைமை தாங்கிய மந்திரி சபை ஆட்சியில் இருந்த காலத்தில் "சட்டம் ஒழுங்கு கெட்டுவிட்டது ஐ மு. மந்திரி சபையையும், சட்டசபையையும் கலைக்க வேண்டும்" என்று தலைகீழாக நின்று கொண்டு கூப்பாடு போட்டவர்கள்தாம் சிண்டிகேட், ஜனசங்கம், சுதந்திரா, பி. எஸ் பி— ஏன்— தி. மு. க. கூட என்பதை யாவரும் அறிவர்.

எனினும் இன்று, தங்கள்மீதும் தாக்குதல் வந்துவிட்டது —அல்லது வரபபோகிறது— என்ற நிலைமை உருவான பிறகு தான் இந்தக் கட்சிகளுக்கு ஞானோதயம் பிறந்துள்ளது.

எனினும் இன்றுள்ள அரைகுறை ஜனநாயக உரிமைகளை பாதுகாப்பது அவசியம் என்ற காரணத்தால், அவை ஜனநாயக இயக்கத்தை மேலும் வளர்க்கப் பயன்படும் என்ற காரணத்தால் கவர்னரின் விசேஷ அதிகாரத்தை ரத்து செய்யும் முயற்சியை வரவேற்பது அவசியம்.

முதலமைச்சர் கருணநிதி "குடியரசு தலைவர் ஆட்சிக்கு சிபாரசு செய்யும் அதிகாரம் கவர்னரிடமிருந்து பறிக்கப்பட வேண்டும்" என்று கூறியுள்ளார்.

இந்தக் கருத்தின்வழி அவரும் அவரது கட்சியும் உறுதியாக நின்று இறுதிவரை மத்திய அரசின் சகல தில்லுமுல்லுகளையும் எதிர்த்துப் போராடுமா என்பதைப் பொறுத்துப்பார்ப்போம்.

—கே. எம்.

# சென்னையில் சவானுக்குக் கருப்புக் கொடி!

## மத்திய அரசு ஊழியர்கள் ஆர்ப்பாட்டம்!

3-10-70 அன்று மத்திய நிதிஅமைச்சர் சவான் சென்னை வந்திருந்த பொழுது ஆயிரக் கணக்கான மத்திய அரசு ஊழியர்கள் அவருக்கு கறுப்புக் கொடி காட்டி ஆர்ப்பாட்டம் செய்தனர். ரூ. 15 இடைக்கால நிவாரணம் அளித்து ஏமாற்றுவதை கண்டித்தனர். குறைந்த பட்சம் ரூ 70 இடைக்கால நிவாரணம் வேண்டுமென்று வற்புறுத்தினர். சோசலிசம் பேசி ஏமாற்றும் இண்டிகேட் மோசடியை அம்பலப்படுத்தினர்.

திரு. சவான் பேசியபொதுக் கூட்டத்தில் கலந்துக்கொண்டவர்களை விட, கறுப்புக் கொடி ஆர்பாட்டத்தில் கலந்துக் கொண்டவர்கள் எண்ணிக்கை தான் அதிகமாக இருந்தது. சென்னையிலுள்ள பல்வேறு மத்திய அரசு காரியாலங்களில் பணியாற்றும் ஊழியர்கள் ஆர்ப்பாட்டத்தில் கலந்துக் கொண்டனர். குறிப்பாக தபால் தந்தி ஊழியர்கள் பெரும்பாலானவர்கள் கலந்துக்கொண்டனர். சென்னையிலுள்ள முக்கியமான ஒவ்வொரு தபாலாபீசிலிருந்தும் ஊர்வலமாக வந்தனர்.மத்திய அரசு ஊழியர்கள்சங்கங்களின் இணைப்புக் குழு செயலாளர் தோழர் சந்திரசேகர் இந்த ஆர்ப்பாட்டத்திற்கு தலைமை தாங்கினர்.

ஆர்ப்பாட்டத்தை தடுக்க போலீசார் பெரு முயற்சி செய்தனர். தொழிற்சங்க தலைவர்களை அழைத்து நூறு பேர்களுக்கு மேல் ஆர்ப்பாட்டத்திற்கு வரக்கூடாது என்று மிரட்டினர். ஆர்ப்பாட்டத்திற்கு ஊழியர்கள் வராமல் தடுக்க பலவிதமான முயற்சிகளை மேற்கொண்டனர். குதிரைப் படை உட்பட ஆயிரக் கணக்கான போலீசார் ஆயுதங்களுடன் நிறுத்தப் பட்டனர். மக்கள் கூட்டமாக சேர முடியாத இடமாக பார்த்து ஆர்ப்பாட்டம் செய்பவர்கள் நிற்க வேண்டுமென்று வற்புறுத்தினர்.

நன்ருக இருட்டிய பிறகு தான் சவானை ஆர்ப்பாட்டம் நடைபெறவிருந்தசேப்பாக்கம் எழிலகத்தின் பக்கமாக அழைத்து வந்தனர். கருப்புக் கொடிகளை சவான் வந்த பிரதேசம் முழுவதும் இருட்டடிப்பு செய்யப்பட்டது. ஆனல் பல்லாயிரக் கணக்கான மத்திய அரசு ஊழியர்களின் குரலோசையை தடுக்க போலீசாரால் முடியவில்லை. காது செவிடுபடும்படியான கோஷங்களுக்கிடையே பலத்த போலீஸ் பாதுகாப்புடன், சவான் கடற்கரையில் நடந்த காங்கிரஸ் பொதுக் கூட்டத்திற்கு போய் சேர்ந்தார் அங்கிருந்த சிறு கூட்டத்தில், வழக்கம் போல் ஜனநாயகம் சோஷியலிசம் பற்றி பேசினர்.

# படித்தோருக்கு வேலையில்லை பட்டமளிப்புவிழா ஒரு கேடா?

## சவான் முன்னிலையில் மாணவர்களின் ஆர்ப்பாட்டம்

5-10-70 அன்று சென்னை பல்கலைக் கழக பட்டமளிப்பு விழா பிரசங்கம் நிகழ்த்துவதற்கு மத்திய நிதி அமைச்சர் சவான் வந்த பொழுது சென்னையில் பல்வேறு கல்லூரிகளைச் சேர்ந்த நூற்றுக்கணக்கான மாணவர்கள் பல்கலைக் கழகம் முன் கூடி நின்று 'படித்தோருக்கு வேலையில்லை பட்டமளிப்பு விழா ஒரு கேடா! பட்டம் வேண்டாம்வேலை வேண்டும், சோஷியலிசம் பேசி ஏமாற்றுதே! சவானே திரும்பி போ' என்பன போன்ற கோஷங்களை எழுப்பி ஆர்ப்பாட்டம் செய்தனர். தோழர் என். ராம் இந்தஆர்ப்பாட்டத்திற்கு தலைமை தாங்கினர். தமிழக மாணவர் சம்மேளத்தின் சென்னை கிளையின் சார்பாக நடந்த இந்த ஆர்ப்பாட்டத்தில் மருத்துவ கல்லூரி கலைக் கல்லூரி, பச்சையப்பன் கல்லூரி கிண்டி இஞ்சினியரிங் கல்லூரி, லயோலா கல்லூரி, சட்டக் கல்லூரி, மருத்துவ கல்லூரி, ஐ. ஐ. டி. மாநில கல்லூரி, விவேகானந்தா கல்லூரி ஆகியவைகளைச் சேர்ந்த மாணவர்கள் கலந்துக் கொண்டனர்.

சவான் வரவேண்டிய வழியில் வராமல், வேறு வழியில் வந்தது குறிப்பிடத்தக்கது.

# அகில இந்திய மாணவர் சங்க இணைப்புக்குழுக் கூட்டம்

## கல்கத்தாவில் நடைபெறுகிறது!

இந்திய மாணவர் சங்கத்தின் (Student Federation of India) இணைப்புக்குழுக் கூட்டம் கல்கத்தாவில் அக்டோபர் 11, 12 தேதிகளில் நடைபெறுகிறது.

பல்வேறு மாநிலங்களில் இருந்து, மாணவர் சங்கங்களின் பிரதிநிதிகள் கலந்து கொள்ள உள்ளனர்.

முக்கியமாக மேற்கு வங்கம் கேரளம், தமிழ்நாடு அஸ்ஸாம், திரிபுரா, பீஹார், ஒரிஸ்ஸா. ஆந்திரா, கர்னடகம் உத்திரப்பிரதேசம், பஞ்சாப்—ஆகிய மாநிலங்களின் மாணவர் சங்கப் பிரதிநிதிகள் இந்த இணைப்புக்குழு பிரதிகளாகத் தேர்தெடுக்கப்பட்டார்கள்.

அகில இந்திய ரீதியில் நடக்கும் மாணவர் இயக்கங்களை ஒருமுகப்படுத்தவும், அகில இந்திய ரீதியில் மாணவர் அமைப்பினை உருவாக்கவும் இந்த இணைப்புக்குழுக் கூட்டம் கல்கத்தாவில் நடைபெற இருக்கிறது.

இதில் தமிழகத்தின் சார்பில், தமிழக மாணவர் சங்கத்தின் பொதுச் செயலாளர் தோழர் நாராயணன், மாணவர் சங்க செயற் குழுவின் முடிவுபடி, இம்மாநாட்டில் கலந்துகொள்ள கல்கத்தா சென்றுள்ளார்.

மாநிலங்களின் மாநாடுகளை முடித்து, விரைவில் அகில இந்திய மாணவர் மாநாடு ஒன்று நடைபெறவிருக்கிறது.

## யானை வெடியும்—
## கோழைகளின் பிதற்றலும்

திருத்தல் வாதிகள் அரசியல் கோழைகள் என்பதை நாமறிவோம்.

ஆனால் அவர்கள் தங்கள் சொந்த நிழலைக் கண்டே கதிகலங்கும் ''கோழைகள்'' என்பதனை அண்மையில் நிரூபித்துள்ளனர்!

செப்டம்பர் 27—ந் தேதி ''ஜனசக்தி''யில்—''கேரள தேர்தல் அனுபவம்'' பற்றி ஒரு கட்டுரை தீட்டப்பட்டுள்ளது! அக்கட்டுரையில்—உடுமஞ்சோலையில் நேர்ந்ததொரு அனுபவம் (!.) விவரிக்கப்பட்டுள்ளது.

அதாவது—உடும்பஞ்சோலைத் தொகுதியில், சாந்தன் பாறைக்குச் சென்றுகொண்டிருந்த திருத்தல்வாதிகளின் 'ஜீப்' மீது, சாந்தன்பாறையிலிருந்து வந்துகொண்டிருந்த நமது ஜீப்பிலிருந்து இரண்டு வெடிகுண்டுகள் வீசப்பட்டதாய்! நமது ஜீப்பினில் தோழர் உமாநாத் இருந்தாரென்று அக்கட்டுரையில் குறிப்பிடப்பட்டுள்ளது

வலது கம்யூனிஸ்டுகளின் 'ஜீப்' டிரைவரின் சாமர்த்தியத்தாலும், அவர் ஜீப்பை அதிவேகமாக ஓட்டியதாலும் அனைவரும் 'உயிர் தப்பியதாக' அக்கட்டுரையில் குறிப்பிடப்பட்டுள்ளது!

'அரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்' என்ற கதை இது!

ஏனெனில் உடும்பஞ்சோலையில் நடந்துகொண்டிருந்த மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் கூட்டத்தில் கலந்துகொள்ள, தோழர் ஆப்ரஹாம் எம். பி. உடும்பஞ்சோலைக்கு 'ஜீப்பில்' வந்துகொண்டிருந்தார்!

அந்த ஜீப்பில் தோழர் உமாநாத் இல்லை! அதே நேரத்தில், அவர் சாந்தன்பாறைப் பொதுக்கூட்டத்தில் பேசிக்கொண்டிருந்தார்.

தோழர் ஆபிரஹாம் வந்தஜீப்பினை, வலது கம்யூனிஸ்டுகளின் ஜீப் எதிர் திசையில் கடந்து போய்க்கொண்டிருந்தபோது—நம் ஜீப்பைத்தாண்டிய சிறிது நேரத்திற்குள் ஒரு 'வெடி' சத்தம் கேட்டது.

அது என்னவென்று அறிய—நமது தோழர்கள் தங்கள் ஜீப்பை நிறுத்தினார்கள்!

சிறிது தூரத்தில் ஒருவர் நின்று, இரண்டாவது தடவையாக வாணம் விடுவதை நம் தோழர்கள் கண்டனர். அதுவும் வெடித்தது.

அதன்பின்தான் உண்மை என்னவென்று நமது தோழர்களுக்கு விளங்கியது!

தோட்டங்களில், இரவில் யானைகள் வராமல் விரட்டுவதற்காக, தோட்டக் காவல்காரன் விட்ட வாணம் அது!

விபரம் தெரிந்ததும் நமது 'ஜீப்' மீண்டும் புறப்பட்டுச் சென்றது.

இதுதான் நடந்த விஷயம்!

'வெடி' சத்தம் கேட்டதும் நமது தோழர்கள் ஜீப்பை நிறுத்திப் பார்த்தனர்! வலது கம்யூனிஸ்டுகளும் தங்கள் 'ஜீப்பை' நிறுத்திப் பார்த்திருந்தால் உண்மையை உணர்ந்திருப்பார்கள்!

ஆனால்— வாணவேட்டு கேட்டதும், 'தலைதப்பியது தம்பிரான் புண்ணியம்' என்று ஓட்டமெடுத்த வலதுகளை — பயப்பேய் எவ்வளவுதூரம் உலுக்கி எடுத்திருக்கிறது என்பதை 'ஜனசக்தி' மூலம்தான் தெரிந்துகொள்ள முடிந்தது!

அய்யோ! பாவம்!

வாணம் வெடித்தவுடன், வெடிகுண்டு வெடித்ததாக எண்ணி, அரண்டு முக்காடு போட்டு பிடித்த ஓட்டத்தை. எத்தனை மைல் சென்று நிறுத்தினார்கள் என்று தெரியவில்லை! ஆனால் இவர்களுக்கு ஏற்பட்ட குலைநடுக்கத்தினில் எழுந்த கற்பனை— நமது ஜீப்பில் தோழர் உமாநாத் தான் இருந்தார் என்று நினைக்கும் அளவிற்கு ஓடியிருக்கிறது என்பது 'ஜனசக்தி' யின் மூலம் தெரிகிறது! ஆக— கற்பனையும் அபாரம்! கதிகலக்கமும் தான்!!

''ஒலிம்பிக்'' கில் கலந்துகொள்ளும் அளவிற்கு ஓடியவர்கள்— வெட்கித் தலைகுனிய வேண்டிய கோழைகள்— ''வெடிகுண்டுக்குப் பயந்து தமிழ்நாட்டிற்கு ஓடிவிடுவேன் என்று எண்ணினாரோ'' என 'ஜனசக்தி' யில் 'பேனாவீரம்' காட்டியுள்ளனர்!

நாய் குலைப்பதைக் கேட்டு— நக்சல்பாரி வந்ததாக நினைத்துச் சுட்டு— தன் சக போலீஸ் நண்பனைப் படுகாயப்படுத்திய ஒரு போலீஸ்காரனைத் துணிச்சல்காரனாக்கி விட்டார்கள் இந்தக் கோழைகள்.

'வாண வேட்டு' கேட்டே ஓட்டமெடுத்த 'வீராதி வீரர்களுக்கு' நாம் ஒன்று சொல்ல விரும்புகிறோம்!!

வாணவேட்டுக்கே ஓட்டமெடுக்கும் நீங்கள்— உண்மையான குண்டைப் பார்த்திருந்தால், தமிழ்நாடென்ன, ஏழெட்டு மாநிலம் தாண்டிப் போய்தான் வண்டியை நிறுத்தியிருப்பீர்கள்! வாங்கிய மூச்சை விட்டிருப்பீர்கள்!

அந்த பயஜன்னியில் எழுந்த ஆதாரமற்ற பிதற்றல்தான் 'ஜனசக்தியில்' வெளியான கட்டுரை.

திரிபுவாதிகள் அரசியல் கோழைகள் மட்டுமல்ல. சகலவிதத்திலும் 'பயங்கொள்ளிகள்' என்பதை இது மீண்டும் நிலை நாட்டியுள்ளது.

சிலநாட்கள்கூட சிறையில் இருக்கத் தாங்காமல்— சுப்ரீம் கோர்ட்டில் எழுதிக் கொடுத்துவந்த தீரரை 'தலைவராகக்' கொண்ட கட்சிதானே!!

''இனி போராட்டம் நடத்தமாட்டோம்'' என்று எழுதிக் கொடுத்து அடிபணிந்த கட்சிதானே!

7 ஆயிரம் தொண்டர்கள்— திருச்சி சிறையில் குடிக்க தண்ணீரும், உண்ண உணவும், இருக்க இடமும் இன்றி இன்னலுற்று சித்திரவதைப் பட்டுக்கொண்டிருந்த வேளையில்— அவர்களை விட்டுவிட்டு சென்னைக்கு ஓடிய மாநிலத் தலைவர்களைக் கொண்ட கட்சிதானே!

உங்கள் வீரத்தை வேறு எங்கேபோய் கக்க முடியும்? காகிதத்தில் தானே!!

அந்தக் காரியத்தை தாராளமாக பயமின்றி செய்துகொண்டிருங்கள்! அந்த வேளையில், வலது கம்யூனிஸ்டுகளின் கவனத்திற்கு, இப்போதே ஒரு விஷயத்தை கொண்டு வருவது சாலச்சிறப்புடையது எனக்கருதுகிறோம்!

அதாவது—

தீபாவளி இந்த மாதம் வர இருக்கிறது!

எவனாவது ஒரு சுட்டிப்பயல் 'பட்டாசு' சுட்டுத் தொலைக்கப் போகிறான்! ''செட்டது குடி''யென்று ''குதிகால் பிடரியில் இடிபட'' 'ஓட்டம்' பிடித்துவிடப் போகிறீர்கள்!

எதற்கும் 'ஜாக்கிரதை'யாக இருங்கள்! இல்லையேல், உங்கள் ''கோழைத்தனத்திற்கு''—சுட்டிப்பயலும் 'அசட்டுப்பட்டம்' கட்டிவிடுவான்!

—ஞானபாரதி

## வீட்டு வரி உயர்வும்
## ஏழைகளின் துயரும்

தென்காசியில் துப்பாக்கிச் சூடு! ஒருவர் மாண்டார்!

வீட்டுவரிஉயர்வை எதிர்த்து ஆர்ப்பாட்டம்நடத்தியவர்கள் மீதுதான் துப்பாக்கிச் சூடு நடத்தப்பட்டிருக்கிறது.

காங்கிரஸ்ஆட்சியின்போது- ''கூலி உயர்வு கேட்டதனால் குண்டடிபட்டுச் செத்தான் அத்தான்''.

ஆனால், தி.மு.க ஆட்சியில்- ''வரி உயர்வை எதிர்த்த அத்தான், குண்டடிபட்டு செத்தான்''.

எந்தவொரு நியாயமான போராட்டத்தையும் துப்பாக்கிச் சனியனால் அடக்கிவிட நினைக்கும் தி. மு. க. அரசின் மனோபாவத்தை இது மேலும் அம்பலப்படுத்தியுள்ளது.

இத்தகைய அடக்குமுறைப் போக்கு வன்மையாககண்டிக்கத்தக்கது.

தென்காசியில் உருவாகி இருக்கும் பிரச்சனை—மாநிலம் முழுவதும் தோன்றியுள்ள பிரச்சனையாகும்.

மதுரையிலும் நகரவையின் வீட்டுவரி உயர்வை எதிர்த்துக் கிளர்ச்சிகள் நடக்கவுள்ளன.

எனவே—உண்மையில் வரி உயர்வினால்அவதிப்படும் ஏழை மக்களின துயரைக் கருத்தினில் கொண்டு—அவர்தம் துயர் துடைக்க தேவையான நடவடிக்கைகளை அரசு மேற்கொள்ள வேண்டும்.

இல்லையேல், தமிழகமெங்கும் உள்ள மக்கள் போராட முன்வருவார்கள்.

### ரிவிஷன் அதிகாரி

உண்மையில் இவ்வரி உயர்வு ஏற்பட்டுள்ளது ஏன்?

ஐந்து ஆண்டுகளுக்கு ஒருமுறை ஜெனரல் ரிவிஷன் என்ற பெயரால் வீட்டு வரி பரிசீலனை செய்ய நகரசபைகளுக்கு தமிழ்நாடு சர்க்கார் அதிகாரிகளை அனுப்பி வைக்கிறார்கள்.

அவர் வீடு வீடாக வந்து பார்வையிட்டு வீட்டு வரியை நிர்ணயிக்கிறார். அவ்வாறு அவர் வரி நிர்ணயிப்பதில் நூற்றுக்கு தொண்ணூறு பேருக்கு, அதிக வரியையே நிர்ணயிக்கிறார். மிகச்சில வீடுகள், கட்டிடங்களை விட்டு வைக்கிறார். ஆனால் எந்த வீட்டுக்கும், முன்பு விதிக்கப்பட்ட வரி அதிகமாக இருக்கிறது; இப்போது குறைக்க வேண்டும் என்று குறைப்பது இல்லை.

இவவாறு வரியை உயர்த்த வேண்டுமென்ற திட்டத்தின படி வந்துள்ள அதிகாரியின் நடவடிக்கையால்பாதிக்கப்படுவது, சாதாரண மக்களே! உதாரணமாக பத்து ரூபாய் வரி இருந்த வீடுகளுக்கு முப்பது முதல் ஐம்பது ரூபாய் வரைவரியை உயர்த்தியிருக்கின்றனர்.

### யாரை பாதிக்கிறது?

வரி உயரும்போது வாடகை உயர்கிறது வாடகை உயரும்போது குடியிருக்கும் மக்கள் பாதிக்கப்படுகிறார்கள். வரி உயர்வினால் வீட்டு சொந்தக்காரர்கள் மட்டுமல்ல, குடியிருக்கும் மக்களும் பாதிக்கப்படுகிறார்கள். ஆகவே, இத்தகைய வரி உயர்வினால் பெரும்பாலான மக்கள் பாதிக்கப்படுகின்றனர்.

ஆனால் செல்வாக்கு பெற்ற பணக்காரர்கள், பெரு முதலாளிகளின், பங்களாக்கள், ஆலைகள், கட்டிடங்கள் முதலியவற்றின் மதிப்புக்கு குறைவாகவே வரி விதிக்கப்பட்டு, தொன்று தொட்டு குறைந்த வரியையே செலுத்தி வருகின்றனர். இப்படிப்பட்ட பங்களாக்கள், பெரும் கட்டிடங்கள் முதலியவைகளை பரிசீலிக்க மாநில அளவில் தனி அதிகாரிகள் நியமிக்கப்பட்டால் பொருள் உண்டு.

### நகரவை தீர்மானங்கள் நிராகரிப்பு!

கூரை வீடு கட்டிடமாக மாற்றப்பட்டாலோ, அதிகப்படியாக கட்டிடம் கட்டினாலோ உடனே அவ்வீட்டின் வரியை உயர்த்துவதற்கு நகரசபை ஆணையாளருக்கு அதிகாரம் உண்டு. இதன்படி அவ்வப்போது வரி உயர்த்தப்பட்டு வருகிறது. அதற்கென நகரசபையிலேயே அதிகாரிகளும் உள்ளனர்.

ஆகவே, வீட்டுவரி பரிசீலனை ரிவிஷன் என்ற பெயரால் தனி அதிகாரியை அனுப்பத்தேவையில்லையென நகரசபைகள் தீர்மானம் போட்டு அனுப்பியிருக்கின்றன.

சர்க்கார் தனக்குள்ள அதிகாரத்தின் மூலம், இத்தீர்மானங்களை நிராகரித்துவிட்டு அதிகாரிகளை அனுப்பி வந்திருக்கிறது.

### காங்கிரஸ் வழியில் தி. மு. க

முன்பு, காங்கிரஸ் கையாண்டு வந்த நடைமுறையே இப்போது தி.மு.க சர்க்காரும் கையாளுகிறது. காங்கிரஸ் சர்க்காருக்கு மாற்று சர்க்கார் தி. மு. க. சர்க்கார், மாற்றான நடவடிக்கைகளை — மக்களுக்கு நன்மை பயக்கும்—''வரியைக் குறைக்க வசதியைப் பெருக்கும்'' திட்டங்களைக் கொண்டு வரும் என்று எதிர் பார்த்த மக்களுக்கு ஏமாற்றமே!

இதன் விளைவுகளில் ஒன்றுதான் தென்காசியில் எழுந்த மக்களின் குமுறல்

### மேலும் உயர்த்த திட்டம் உஷார்?

ரிவிஷன் அதிகாரியின் வரி விதிப்பு 1970 அக்டோபர் 1-ந்தேதி முதல் அமுலுக்கு வருகிறது. இதை அடுத்து, 27 சதவிகித வரி என்பது 1971 ஏப்ரல் 1-முதல் அமுலுக்கு வரக் காத்திருக்கிறது ரிவிஷன் அதிகாரியின் வரி விதிப்பின் மூலம் பாதிக்கப்பட்ட மக்கள், மதுரை நகரசபையின் கோரிக்கையின் படி 27 சதவிகிதத்தினால் மேலும் பாதிக்கப்பட இருக்கிறார்கள்.

ஆகவே இன்றுள்ள நிலைமையில், இவ்வரி உயர்வுகளை எதிர்த்து சகல பகுதி மக்களும் ஓரணியில் திரண்டு போராட வேண்டியது மிகமிக அவசிய மாகும்.

—அலாவுதீன்

## "நான் யார் தெரியுமா?"

முறையிட வந்த பெண் தொழிலாளிகளிடம்

# முதலமைச்சரின் மிரட்டல்

டாபிவட்ஸ் கம்பெனியில் 1—9—70 முதல் வேலை நிறுத்தப் போராட்டம் நடைபெற்று வருகிறது. இந்தக் கம்பெனியில் வேலை செய்யும் 250 தொழிலாளர்களில் பெரும்பாலோர் பெண்கள். ஏகபோக பத்திரிகை முதலாளி கோயங்காவின் உறவினர்கள் இந்த கம்பெனியின் உரிமையாளர்கள்.

125 தொழிலாளர்கள் வேலை நீக்கம் செய்யப்பட்டுள்ளனர். பெரும்பாலும் இவர்கள் பெண்கள். இந்தத் தொழிலாளர்களை திரும்ப வேலைக்கு எடுக்கக் கோரியும் ஓவர்டைம் வேலைக்கு அதிகச் சம்பளமும், சம்பள உயர்வும், பஞ்சப்படியும் கோரியும் வேலைநிறுத்தம் துவங்கி பலவாரங்கள்கடந்தும் தொழிலாளர் இலாகாவும் அரசும் தலையிட்டு பிரச்சினையைத் தீர்க்க உருப்படியான எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை. அதற்கு மாறாக ஏராளமான போலீசாரை 24 மணி நேரமும் கம்பெனி முன் குவித்து புதிய தொழிலாளர்களை வேலைக்கு அமர்த்துவதற்கு முதலாளிக்கு உதவி செய்கின்றனர். கம்பெனி முன் ஆர்ப்பாட்டம் செய்யும் பெண் தொழிலாளர்களை போலீஸ் சப்இன்ஸ்பெக்டர் கையால் பிடித்து இழுத்து துன்புறுத்தியுள்ளார். புதிய தொழிலாளர்களை வேலைக்கு வைப்பதை எதிர்த்து மறியல் செய்த 12 தொழிலாளர்களை கைது செய்து சிறையிலடைத்தனர். வேறு பல பொய் வழக்குகளும் தொழிலாளர்கள்மீது தொடுத்தனர். பெண் தொழிலாளர்களை போலீசார் கிண்டலும் கேலியும் செய்தனர்.

இந்த பிரச்சினைகளை முதலமைச்சரிடம் தெரிவிக்க 23—9—70-ம் தேதி அன்று தோழர் எஸ். கிருஷ்ணமூர்த்தி தலைமையில் காஞ்சனு, மல்லிகா, பானுமதி, கமலா வசந்தா ஆகிய பெண் தொழிலாளர்களும் யூனியன் செயலாளர் அனந்தராமனும் (வேலையிலிருந்து நீக்கப்பட்டுள்ளவர்) உபதலைவர் ஷண்முகம் சென்றனர்.

பெண் தொழிலாளர்கள் பிரச்சினையை எடுத்துக் கூற ஆரம்பித்த உடன் முதலமைச்சர் கருணாநிதி அவர்கள் மிகவும் ஆத்திரம் அடைந்து "நான் யார் தெரியுமா? எங்கு வந்திருக்கிறீர்கள் தெரியுமா? யாரிடம் பேசுகிறீர்கள் தெரியுமா? உங்களையெல்லாம் யார் உள்ளே விட்டது. இதென்ன சந்தைக்கடையா? வசனம் பேச வந்தீர்களா? கோரஸ் பாட வந்தீர்களா? தொழிலாளர்களுக்கு இடம் கொடுத்தாலே இப்படித்தான்" என்று மிகவும் கோபத்துடன் கூறி "தொழிலாளர் அமைச்சரைப் போய் சந்தியுங்கள்" என்று கூறினர்.

முதலமைச்சர் இப்படி பேசியதைக் கண்டு வியப்படைந்த பெண் தொழிலாளர்கள் மீண்டும் முதலமைச்சரை நோக்கி "நாங்கள் கோரஸ் பாட வரவில்லை. குறைகளைச் சொல்ல வந்தோம். நீங்கள் இப்படி கோபிக்கலாமா?" என்று கேட்டனர். இருப்பினும் முதலமைச்சர் மேலும் கோபத்துடன் "என்னிடம் எதுவும் கூற வேண்டாம் போய் தொழிலாளர் அமைச்சரை சந்தித்து அவரிடம் கூறுங்கள்" என்று கூறினர்.

முதலமைச்சரை சந்தித்து முறையிட்டால் போலீஸ் அக்கிரமத்தை நிறுத்தவும் எல்லோருக்கும் வேலை கிடைக்கச்செய்யவும் தக்க நடவடிக்கை எடுப்பார் என்று நம்பிக்கையுடன் சென்ற தொழிலாளர்கள் ஏமாற்றத்துடன் திரும்பினர். முதலமைச்சர் நடந்துக் கொண்ட முறையையும் கூறிய வார்த்தைகளையும் கேள்விப்பட்ட மற்ற தொழிலாளர்கள் மிகவும் ஆத்திரமடைந்தனர்.

## இடைக்கால நிவாரணம்: ஏ. கே. கோபாலன் அறிக்கை

ஒழுங்கான ஊதிய உயர்வு தரும்படி மத்திய அரசினை வற்புறுத்த பலம்மிகுந்ததோர் இயக்கத்தைக்கட்டுமாறு தோழர் ஏ. கே. கோபாலன் அறிக்கை விடுத்துள்ளார்.

மூன்றாவது ஊதியக்குழு பரிந்துரைத்துள்ள திருப்தியற்ற சிபாரிசுகளுக்கு நியாயமான, வலுவான எதிர்ப்பினை 25 லட்சம் மத்திய அரசாங்க ஊழியர்கள் தெரிவித்துள்ளனர்.

ஐந்தாவது இந்தியத் தொழிலாளர் மாநாடு ஏற்றுக்கொண்ட தேவை அடிப்படையான குறைந்த ஊதியம் என்ற கோட்பாட்டை ஊதியக்குழு மீண்டும் ஒருமுறை நிராகரித்துவிட்டது.

பெயரளவிற்கு இந்த சொற்ப இடைக்கால ஊதிய உயர்வு அளித்துள்ளது. குறிப்பாக, நான்காவது பிரிவு ஊழியர்களுக்கு பெயரளவில் தான் சம்பள உயர்வு கிடைக்கும்; அவர்களுடைய கோரிக்கைகளில் பெரும்பாலானவை தீர்க்கப்படவில்லை.

அதிக இடைக்கால நிவாரணம் கோரி, படிப்படியாக திட்டமிட்ட ரீதியில் நடவடிக்கை எடுத்ததற்காக மத்திய அரசாங்க ஊழியர்களுக்கு என் வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்கிறேன்! ஒரு ஒழுங்கான ஊதிய உயர்வு அளிக்கும்படி, மத்திய அரசாங்கத்தை வற்புறுத்த மத்திய அரசாங்க ஊழியர்கள் ஒரு பலமிக்க இயக்கத்தைக் காட்டுவார்கள் என்று நான் நம்புகிறேன்

—என்று தோழர் ஏ. கே. கோபாலன் தனது அறிக்கையில் குறிப்பிட்டுள்ளார்.

## இராமநாதபுர மாவட்ட விவசாயிகள் மாநாடு!

இராமநாதபுரம் மாவட்ட விவசாயிகள் மாநாடு செப்டம்பர் 30-ம் நாள் சாத்தூர் வட்ட சுண்டங்குளத்தில் நடைபெற்றது. இம்மாநாட்டிற்குத் தோழர் சீ. நம்மாள்வார் தலைமைவகித்தார். மாநாட்டுப் பிரதிநிதிகள் கூட்டத்தில் ஆர். ராமராஜ் ரிப்போர்ட் செய்தார்.

தோழர் கே. பி. ஜானகியம்மாள் மாநாட்டை வாழ்த்திப் பேசினர். 30 தோழர்கள் விவாதத்தில் பங்கு கொண்டனர்.

தோழர் சீ நம்மாள்வார் தலைவராகவும், எஸ் செல்லச்சாமி உபதலைவராகவும், பி. சி. சி. பெரியய்யா செயலாளராகவும் எஸ். ஏ. பெருமாள் உபசெயலாளராகவும், தோழர்கள் கரு. சீனிவாசன், எஸ். சுப்பிரமணியம் ஆகியோர் கமிட்டி உறுப்பினர்களாகவும் தேர்ந்து எடுக்கப்பட்டனர். மாநில மாநாட்டுக்கு தோழர்கள் பெரியய்யா கரு. சீனிவாசன், எஸ் ஏ. பெருமாள், சீ நம்மாள்வார், எஸ். சுப்பிரமணியம் ஆகியோர் பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

இரவு நடந்த பொதுக்கூட்டத்திற்கு தோழர் பி. செல்லையா தலைமை வகித்தார். தோழர்கள் கே. பி. ஜானகியம்மாள், மு காசிநாதன், தொண்டர் துரைச்சாமி, சீ. நம்மாள்வார், எஸ். ஏ. பெருமாள் திருஞானம் ஆகியோர் பேசினர்.

## மில் தொழிலாளர் உண்ணாவிரதம்!

1965—ம் ஆண்டு செப்டம்பர் முதல் தொழிலாளர்களிடமிருந்து பிடித்தம் செய்தபிராவிடன்டு பண்டு ரூபாயை அரசாங்கத்திற்குக் கட்டாததால் வேலையில் இருந்து நின்றுவிட்ட, நிறுத்தப்பட்ட அல்லது இறந்துபோய்விட்ட தொழிலாளர்கள் பிராவிடென்ட் பணம் கிடைக்காமல் பெரும் வேதனைக்கு உள்ளாகியுள்ளனர்.

இதனை பலமுறை அரசாங்கத்திற்கும், அதிகாரிகளுக்கும் எடுத்துக்கூறியும் எவ்விதப் பயனுமில்லை.

சுமார் 1500 தொழிலாளர்களுக்கும் சுமார் 17 லட்சத்திறகு மேல் கட்டவில்லை.

எனவே பி. எப். பணத்தை மில் முதலாளியிடமிருந்து அரசாங்கம் வசூலிக்கும் வரை—அக்டோபர் 12 முதல் உண்ணாவிரதமிருக்க தொழிலாளர்கள் முடிவு செய்துள்ளனர்.

## மதுரையில் தபால், தந்தி ஊழியர் ஆர்ப்பாட்டம்

கடந்த 1-10-70ல் மதுரை நகர தபால் தந்தி ஊழியர்கள் நீண்டதோர் ஆர்ப்பாட்ட ஊர்வலம் நடத்தினர்.

இந்த ஆர்ப்பாட்ட ஊர்வலத்தினர் சட்டை அணியாமல் ஊர்வலம் சென்றனர்.

ஆர்ப்பாட்ட முழக்கம் நான்கு மாசி வீதிகளையும் கிடுகிடாய்க்க வைத்தது.

அவர்களுடைய கோரிக்கை முழக்கம்தான் என்ன?

மத்திய அரசு வெளியிட்டுள்ள இடைக்கால நிவாரணம் போதாது 75 ரூபாய் கொடுக்க வேண்டும். குறைந்த சம்பளம் பெறக் கூடிய நான்காம் தர ஊழியர்களுக்கு ரூ 15—ம், ஆயிரம் ரூபாய்க்கு மேல் சம்பளம் பெறக்கூடிய ஐ. ஏ. எஸ். ஐ. சி. எஸ். போன்ற அதிகார வர்க்கத்தினருக்கு ரூ. 45-ம் இடைக்கால நிவாரணமாக வழங்கியுள்ள அநீதியைக் கண்டித்தும் இந்த ஆர்ப்பாட்ட ஊர்வலம் நடைபெற்றது

ஆர்ப்பாட்ட ஊர்வலத்தில் சுமார் 300 ஊழியர்கள் மேலாடையின்றி வந்தனர். இப்புதுமையான ஊர்வலம் மத்திய அரசினரின் அநீதியான போக்கினால் ஊழியர்கள் எவ்வாறு கொதிப்படைந்துள்ளனர் என்பதை எடுத்துக்காட்டியது.

ஊர்வலத்தை மூன்றாம் பிரிவு ஊழியர்களின் மாநிலச் செயலாளர் தோழர் ஏ பிரமநாதன் அவர்களும், நான்காம் பிரிவு ஊழியர் சங்க மாநிலச் செயலாளர் தோழர் பசுபதி அவர்களும் தலைமையேற்று நடத்தினர்.

ஊர்வலத்தின் முடிவில் கூட்டம் நடைபெற்றது.

## விவசாய தொழிலாளர் மாநாடு

மன்னார்குடி தாலுகா விவசாயத் தொழிலாளர் சங்க 12-வது மாநாடு, செப்டம்பர் 16-ம் நாள் சித்திரையூர் வெண்மணித் தியாகிகள் அரங்கில் நடைபெற்றது. மாநாட்டில்—செங்கொடியை தஞ்சை மாவட்ட விவசாய சங்கச் செயலாளர் தோழர் ஏ. நடராஜன் ஏற்றி வைத்தார்.

தேவாங்குடி ஊராட்சி மன்றத் தலைவர் தோழர் கோதண்டம் மாநாட்டிற்கு தலைமை வகித்தார்.

மாநாட்டிடை மணக்கரை ஊராட்சி மன்றத்தலைவர் தோழர் கே. ராஜு திறந்து வைத்தார்.

தாலுகா விவசாயத் தொழிலாளர் சங்கச் செயலாளர் தோழர் ஏ. கே. கணேசன் ஆண்டறிக்கையை சமர்ப்பித்துப் பேசினர்.

மாநாட்டில் தாலுகா பூராவிலும் இருந்து 110 பிரதிநிதிகள் பங்கு கொண்டனர். அறிக்கை மீது பல தோழர்கள் விவாதித்தனர். பின்னர் அறிக்கை ஏகமனதாக நிறைவேற்றப்பட்டது.

புதிய நிர்வாகக் கமிட்டிக்கு 15 பேர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டார்கள்; மாவட்ட மாநாட்டிற்கு 29 பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

அன்று மாலை மாபெரும் ஊர்வலமும் பொதுக்கூட்டமும் நடைபெற்றன.

பொதுக்கூட்டத்திற்கு தோழர் டி. கோதண்டம் தலைமை வகித்தார். தோழர்கள் கே. ஆர். ஞானசம்பந்தம், ஏ. கே. கணேசன், ஏ. நடராஜன், என். அறிவழகன், கே பெரியசாமி, ஏ. முத்தையா ஆகியோர் பேசினர்.

## வேலையில்லா ஆசிரியர் ஆலோசனைக் கூட்டம்!

உத்தமபாளையம் வட்டார வேலையில்லா அனைத்து ஆசிரியர்களின் இரண்டாவது ஆலோசனைக் கூட்டம் அக்டோபர் 5—ம் நாள் நடைபெற்றது. 100-க்கு மேற்பட்ட வேலையில்லா ஆசிரியர்கள் கலந்து கொண்டனர்.

அரசு ஆணை 250—ஐ அமுல் படுத்த வேண்டும்; வேலை கிடைக்கும் வரை எல்லா ஆசிரியர்களுக்கு உதவித் தொகை வழங்கப்பட வேண்டும் போன்ற கோரிக்கைகளை இக் கூட்டம் முன் வைத்தது.

## கைத்தறி நெசவாளர் ஆர்ப்பாட்டம்!

கரூர் வட்ட கைத்தறி உழைப்பாளர் சங்கத்தின் சார்பாக, பின்வரும் கோரிக்கைகளை வற்புறுத்தி மாபெரும் ஊர்வலம் நடைபெற்றது. ஊர்வலத்தில் 5 ஆயிரத்திற்கும் மேற்பட்டோர் கலந்து கொண்டனர்.

அவர் தம் கோரிக்கைகளாவன:—

ரூபாய்க்கு 25 பைசா கூலி உயர்வுவேண்டும். ஒரு கழி சுற்ற 10 காசு கூலி தரவேண்டும். கூலி நிர்ணயப் பட்டியல் தொழிலாளர்கள் பார்வைக்கு வைக்கப்படவேண்டும். கைத்தறி தொழிலாளர்களுக்குச் சட்டப்பாதுகாப்பு வேண்டும். என்ற கோரிக்கைகளை வலியுறுத்தி ஆர்ப்பாட்டம் ஊர்வலம் நடைபெற்றது.

அன்று முழுவேலை நிறுத்தமும் அனுஷ்டிக்கப்பட்டது.

பின்னர் நடந்த பொதுக் கூட்டத்தில் கரூர் நகர மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் செயலாளர் தோழர் இரத்தினவேலு, தோழர்கள் பி. குப்புசாமி, சி. சோளியப்பன், பி. எல். மருதமுத்து, சுப்பையா ஆகியோர் பேசினர்.

கூட்டத்திற்கு தோழர் ஆறுமுகம் தலைமை வகித்தார்.

## மாணவர் வாலிபர் சங்க துவக்கம்

கடலூரை அடுத்த குமரப்ப நாயக்கன் பேட்டையில் மாணவர், வாலிபர் சங்கம் செப்டம்பர் 19 அன்று திறந்துவைக்கப்பட்டது. தென்னாற்காடு மாவட்டச் செயலாளர் தோழர் எஸ். நடராஜன் சங்கத்தைத் திறந்து வைத்தார்.

அதைபொட்டி மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்கட்சியின் பொதுக் கூட்டம் ஒன்று நடைபெற்றது கடலூர் காரல் மார்க்ஸ் கலைக்குழுவினரால் தீக்கதிர் ஆசிரியர் கே. முத்தையா எழுதிய 'செவ்வானம்' நாடகம் நடைபெற்றது.

## கண்ணோட்டம்

# மாணவர் எழுச்சி!

அண்மையில் சென்னைப் பல்கலைக் கழக பட்டமளிப்பு விழா நடைபெற்றது. அவ்விழாவில் கலந்துகொள்ள வந்திருந்த மத்திய அமைச்சர் சவான் முன்னிலையில், தமிழக மாணவர் சங்க மாணவர்கள் ஆர்ப்பாட்டம் நடத்தினர்.

"பட்டம் வேண்டாம்! வேலை வேண்டும்" என்ற கோஷத்தை மாணவர்கள் முழங்கினர்.

சென்னைப் பல்கலைக் கழக வரலாற்றில், இத்தகைய ஆர்ப்பாட்டம் நடைபெறுவது இதுவே முதல் தடவை!

"வேலை வேண்டும்" என்ற முழக்கம் இந்தியாவில் உள்ள அனைத்துப் பல்கலைக் கழகங்களிலும் எழுப்பப்பட்டுள்ளது.

அண்மையில் மதுரை பட்டமளிப்பு விழாவிலும், மாணவர்கள் 'வேலை' கோரி, முழக்கம் செய்தனர்!

முதலமைச்சர் தன் பேச்சினை பாதியில் நிறுத்தி, மாணவர் பிரதிபலிப்புகளுக்குப் பதில் தராமல் போய் விட்டார். இவ்விதம் மாணவர் சமுதாயம் கொந்தளித்து நிற்பது ஏன்?

அதற்கு மூலகாரணம், பூதாகரமாய் உருவெடுத்துவரும் வேலையில்லாத் திண்டாட்டமே!

அதற்கு ஒரு தீர்வு காண முயற்சிக்காமல்—மாணவர் போராட்டத்தை அடக்கு முறையால் ஒடுக்கி விடலாம் என்று நினைத்தால் முடியுமா?

இன்று நாட்டில் வேலையில்லாத் திண்டாட்டத்தால், வேதனையுற்று நிற்போர் எண்ணிக்கை 1 கோடியே 60 லட்சமாகும்!

நான்காவது திட்ட முடிவில்—25 ஆயிரம் கோடி ரூபாயை செலவிட்டபின்பு — நாட்டில் சுமார் 2 கோடியே 70 லட்சம் பேருக்கு மேலும் வேலையிலலாது போகும் என்று ரிசர்வ் பாங்கின் ஆய்வு கூறயுள்ளது!

ஜூன் 30— வரை, வேலை தேடித் தரும் நிறுவனங்களில் பதிவு செய்து கொண்டு வேலையற்று நிற்போரின் எண்ணிக்கை 36,21,300 ஆகும்!!

பட்டம் பெற்றவர்கள், வேலை தேடி அலைய வேண்டிய பரிதாப நிலை ஏற்பட்டுள்ளது.

பல்லாயிரக் கணக்கான பொறியியல் பட்டதாரிகளும், வேலையில்லாத் திண்டாட்டத்தால் பாதிக்கப்பட்டுள்ளனர்.

அண்மையில், மருத்துவக் கல்லூரி மாணவர்கள் கூட 'வேலை'கோரி வேலை நிறுத்தமும், ஆர்ப்பாட்டங்களும் நடத்தினர்!

ஆக— முதலாளித்துவ சமுதாயத்தின் ஈன முடிவுகளின் ஒன்றான, இவ் வேலையில்லாத் திண்டாட்டத்தினை ஒழித்தால் தான், மாணவர் போராட்டங்கள் ஓயும்!

இல்லையெனில், எதிர்காலம் இருண்டு கிடப்பது கண்டு, மனம் நொந்து கொந்தெளித்து எழும் மாணவர் சமுதாயம் எரிமலையாய் பொங்கிக் குமுறும்!

## துர்க்காபூர் தினம்

(1 ஆம்: பக்கத் தொடர்ச்சி)

முறையை எதிர்த்து துர்க்காபூர் தொழிலாளர்கள் வேலை நிறுத்தப் போராட்டம் நடத்திய போது, அதை உடைக்கும் கருங்காலிகளாக அவர்கள் செயல் பட்டனர், போலீஸ் ராணுவ லாரிகளில் ஏறி, ஆள் காட்டிக் கொடுக்கும் துரோக வேலையைச் செய்தனர். வேறு இடங்களிலிருந்து ரௌடிகளைத் திரட்டி வந்து தொழிற்சங்க ஊழியர்களைத் தாக்கினர்.

இவ்வளவுக்குப் பிறகும், துர்க்காபூர் தொழிலாளர்கள் அடிபணியாமல் நிமிர்ந்து நின்று போராடுகின்றனர். வேலைப்பளு உயர்வையும் அடக்குமுறையையும் எதிர்த்து அவர்கள் நடத்திய உள்ளிருப்பு வேலை நிறுத்தம் காரணமாக, ஸ்மெல்டிங் பிலாண்ட் (Smelting Plant) என்ற முக்கியமான ஆலைப்பிரிவில் "லாக்கவுட்" ஏற்பட்டுள்ளது இவ்விதம் வீரம் செறிந்த போராட்டங்களை நடத்தி வரும் துர்க்காபூர் தொழிலாளர்களை, சமீபத்தில் அக்டோபர் 2 முதல் 4 முடிய ஜெய்ப்பூரில் கூடிய சி. ஐ. டி. யூ வின் காரியக் கமிட்டிக் கூட்டம் வாழ்த்திப் பாராட்டிற்று.

துர்க்காபூர் தொழிலாளர்கள் பின்கண்ட கோரிக்கைகளை முன் வைத்துப் போராடி வருகின்றனர்:- (அ) துர்க்காபூர் தொழில் பிராந்தியத்திலிருந்து, மத்திய தொழில் பாதுகாப்புப் படையையும் மத்திய ரிசர்வ் போலீஸையும் உடனே வாபஸ் பெற வேண்டும் (ஆ) கைதாகியுள்ள எல்லா தொழிலாளர்களையும் விடுதலை செய்வதுடன் நிறைவேற்றப் படாமலிருக்கும் எல்லா வாரண்டுகளையும் வாபஸ் பெற வேண்டும். (இ) துர்க்காபூர் தொழிலாளர்களுக்கு இழைக்கப்பட்டுள்ள அட்டூழியங்களுக்குப் பொறுப்பான சகலரும் தண்டிக்கப்பட வேண்டும் (உ) துர்க்காபூரில் பிறப்பிக்கப் பட்டுள்ள சஸ்பென்ஷன் உத்தரவுகள், வேலை நீக்க உத்தரவுகள், குற்றப் பத்திரிகைகள் முதலிய அனைத்தும் வாபஸ் பெறப்பட வேண்டும் (ஊ) 144 தடை உத்தரவு ஊரடங்குச் சட்டம், தொழிற்சங்க நடவடிக்கைகளைக் கட்டுப் படுத்தும் இதர தடைகள் அனைத்தையும் வாபஸ் பெற வேண்டும்.

மேலே கண்ட கோரிக்கைகளுக்கு ஆதரவாக, இந்தியத் தொழிலாளி வர்க்கம் முழுவதையும் திரட்ட நவம்பர் முதல் தேதியை "துர்க்காபூர் தினமாக"க் கொண்டாடும்படி, சி. ஐ. டி. யூ வின் காரியக் கமிட்டிக் கூட்டம் அறைகூவல் விடுத்துள்ளது.

நவம்பர் முதல் தேதி கொண்டாட சாத்தியப்படாத மாநிலங்களில் நவம்பர் மாதம் முதல் வாரத்தில ஒரு தினத்தை "துர்க்காபூர் தினமாக"க் கொண்டாடும்படியும் காரியக் கமிட்டி பணித்துள்ளது. தமிழகத்தில் உள்ள தொழிலாளர்கள் அனைவரும் நவம்பர் 5-ம் தேதியை "துர்க்காபூர் தினமாக"க் கொண்டாடும்படி வேண்டுகிறேன். அன்று, ஊர்வலம் ஆர்ப்பாட்டங்கள் முதலியவற்றை நடத்தி, நம் ஆதரவை பிரகடனப்படுத்த வேண்டுகிறேன். மேலும், துண்டுப் பிரசுரங்களை வெளியிட்டு, இக்கொடிய அடக்குமுறையின் விபரங்களை சகல ஜனபகுதியினரிடையேயும் எடுத்துச் சென்று, இந்திரா காந்தி அரசின் சோஷலிச, ஜனநாயக முகமூடியைக் கிழித்தெறிய உதவ வேண்டுகிறேன்.

போராடும் துர்க்காபூர் தொழிலாளர்களுக்கு எல்லா தொழிற்சங்கங்களும், குறிப்பாக சி. ஐ. டி. யூ. தொழிற்சங்கங்களும் நிதி உதவி செய்ய வேண்டும் என்றும், சி. ஐ. டி. யூ.வின் காரியக்கமிட்டி வேண்டிக் கொண்டுள்ளது. ஒவ்வொரு சங்கமும் 5 ரூபாய்க்கு குறையாமல், தங்கள் சக்திக்கேற்ப, பின்கண்ட விலாசத்துக்கு உடனே மணியார்டர் மூலம் பணம் அனுப்பி வைக்க வேண்டுகிறேன்.

விலாசம்:

Kamal Sarkar,
Center of Indian
Trade Unions
172, Lenin Sarani
CALCUTTA-13

சென்னை
7-19-70

தோழமையுள்ள,
ஆர். உமாநாத்,
செயலாளர்,
தமிழ் மாநிலக்குழு
சி. ஐ. டி. யூ.

### மதுரைக் கல்லூரி

# மாணவர் போராட்டம் வெற்றி!

கடந்த கல்வியாண்டின் இறுதியில் தமிழகத்தின் பல்வேறு கலைக் கல்லூரிகளைச் சேர்ந்த மாணவர்கள்— வேலைக்கு உத்திரவாதம் கோரியும், வேறுபல கோரிக்கைகளை முன்வைத்தும்— வேலை நிறுத்தப் போராட்டத்தில் ஈடுபட்டனர்.

அப்போராட்டத்தில் மதுரைக் கல்லூரி மாணவர்களும் கலந்துகொண்டனர். அதனால், அக்கல்லூரியின் விடுதியைச் சேர்ந்த 46 மாணவர்களை மட்டும் விடுதியை விட்டு கல்லூரி நிர்வாகம் நீக்கி விட்டது.

இதற்காக அமைச்சர்கள் பலரைச் சந்தித்தும், கோரிக்கை மனுக்களை சமர்ப்பித்தும்— வற்புறுத்தப்பட்டது!

ஆனால், கோரிக்கை நிறைவேறவில்லை! எனவே அக்டோபர் 6-ந் தேதி முதல் கல்லூரி வாயில் முன்பு மாணவர் தலைவர்கள் இரா. நாராயணன், கா. காளிமுத்து, மருதாசலம், திரவியம் ஆகியோர் தலைமையில் உண்ணாவிரதம் துவங்கப்பட்டது. உண்ணாவிரதத்தில் 20 பேர் கலந்துகொண்டனர்.

அக்டோபர் 7-ம் நாள் காலையில் முழுவேலை நிறுத்தம் நடைபெற்றது. அதன்பின் அதிகாரிகளும், காவல்துறை அதிகாரிகளும் கல்லூரி நிர்வாகத்துடன் பேச்சுவார்த்தை நடத்தினர்.

ஸ்காலர்ஷிப் வாங்கும் மாணவர்களுக்கு கல்லூரியில் உணவுக்கும், ஸ்காலர்ஷிப்புக்கும் ஏற்பாடு செய்வதற்கு நிர்வாகம் ஏற்றுக் கொண்டது

மாணவர் கோரிக்கைகள் நிறைவேற்றப்பட்டமையால் மாணவர் போராட்டம் முடிவுற்றது.

## தியாகராசர் பொறியியல் கல்லூரி மாணவர் போராட்டம்!

மதுரை தியாகராசர் பொறியியற் கல்லூரி மாணவர்கள், தங்கள் கல்லூரி துவங்கிய நாளிலிருந்து சைவ உணவுதருதுடன் அசைவ உணவும் தர வேண்டும் என்று கோரி வருகின்றனர்.

அக்கோரிக்கையைத் தொடர்ந்து வற்புறுத்திப் பல போராட்டங்களில் ஈடுபட்டு வந்துள்ளனர்.

அவர்தம் கோரிக்கையை நிறைவேற்ற மனமில்லாத கல்லூரி நிர்வாகம்— மாணவர்களை பல மறைமுகமான வழிகளைப்பயன்படுத்தி அடக்க முயன்று வந்திருக்கின்றது.

இக்கல்லூரியின் நிருவாகத் தலைவர், பெருமுதலாளி கருமுத்து தியாகராச செட்டியார். இவர் மாணவர்களின கோரிக்கையை பல சொத்தைக் காரணங்களைக் காட்டி நிராகரித்து வருகிறார்.

அக்கோரிக்கையை வற்புறுத்தி, கடந்த ஆகஸ்டு மாதத்தில் இரண்டு வாரங்கள் மாணவர்களே புலால் உணவு தயாரித்தனர்.

அதுகண்டு வெகுண்ட கல்லூரி நிர்வாகம், கல்லூரியை மூடியது. ஆனால் மாணவர்களின் ஒன்றுபட்ட போராட்டத்தின்காரணமாக, மாவட்ட கலெக்டர் தலையிட்டு கல்லூரி திறக்கப்பட்டது.

அதற்குப் பிறகும் நிர்வாகம் —கோரிக்கையை ஏற்க மறுத்தது. கலெக்டரும் தன்னால் இயலவில்லை என்று கைவிரித்து விட்டார்.

எனவே மாணவர்கள் அக். 4-ந் தேதி மீண்டும் தாங்களே புலால் உணவு சமைத்து உண்டனர்.

மாணவர் கோரிக்கையை, பிடிவாதமாக அர்த்தமற்ற வகையில் நிராகரிக்கும் கல்லூரி நிர்வாகம்— மாணவர் போராட்டத்தை ஒடுக்க பல சதிகளைச் செய்கிறது.

ஆனால், மாணவர்களின் ஒன்றுபட்ட போராட்டம், கல்லூரி நிர்வாகத்தின் பிடிவாதத்தை, சூழ்ச்சியை முறியடித்துத் தகர்த்தெறியும்.

## அதிராமபட்டினம் கல்லூரி மூடப்பட்டது

நியாயமான பல கோரிக்கைகளை முன் வைத்துப் போராடி வரும் அதிராமபட்டினம் மாணவரின் கோரிக்கையை ஏற்க மறுக்கும் கல்லூரி நிர்வாகம் அதிராமபட்டினம் கல்லூரியை மூடியுள்ளது!

மூடிய கல்லூரியை உடனே திறக்க வேண்டும்! மாணவர்தம் கோரிக்கையை நிறைவேற்ற வேண்டும் என்று தமிழக மணவர் சங்கம் கோருகிறது!



இந்திய கம்யூனிஸ்ட் கட்சி [மார்க்ஸிஸ்ட்] தமிழ் மாநிலக்குழு சார்பில்
தீக்கதிர் அச்சகத்தில் [13 முதல் சந்து, வடக்குச் சித்திரை வீதி, மதுரை-1] அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர்: கே முத்தையா.